# ஸப்தகிரி

ஆகஸ்ட் 1978





திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்

# ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

## தினசரிபூஜைகள், தர்மதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

### சனி, ஞாயிறு, திங்கள், செவ்வாய் கிழமைகளில்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 3-00 முதல் | 3-30 | வரை | சுப்ரபாதம் |
| 3-30 ,, | 4-15 | ,, | தோமால சேவை (ஏகாந்தம்) |
| 4-15 ,, | 4-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம் |
| 4-30 ,, | 5-00 | ,, | முதல் அர்ச்சனை (ஏகாந்தம்) |
| 5-00 ,, | 5-30 | ,, | முதல் மணி, சாத்துமுறை |
| 5-30 ,, | 1-00 | மதியம் | ஸர்வ தரிசனம் |
| 1-00 ,, | 1-30 | ,, | 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) 2-வது மணி |

மாலை

| | | | |
|---|---|---|---|
| 1-30 ,, | 7-30 | ,, | ஸர்வ தரிசனம் |
| 7-30 ,, | 8-30 | ,, | இரவு கைங்கர்யம், |
| 8-30 ,, | 11-30 | ,, | ஸர்வ தரிசனம் |
| 11-30 | | | ஏகந்ாத சேவை (ஏகாந்தம்) |

### புதன் கிழமைகளில் (ஸஹஸ்ர கலசாபிஷேகம் நடைபெறுவதால்)

காலை

| | | | |
|---|---|---|---|
| 3-00 ,, | 3-30 | ,, | சுப்ரபாதம் |
| 3-30 ,, | 6-00 | ,, | விஸ்வரூப ஸர்வ தரிசனம் |
| 6-00 ,, | 6-15 | ,, | சுத்தி முதலியவை |
| 6-15 ,, | 7-00 | ,, | தோமால சேவை (ஏகாந்தம்) |
| 7-00 ,, | 7-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம் |
| 7-30 ,, | 8-30 | ,, | முதல் அர்ச்சனை (ஏகாந்தம்) |
| 8-30 ,, | 9-00 | ,, | முதல் மணி, பலி, சாத்துமுறை |
| 9-00 ,, | 10-00 | ,, | ஸஹஸ்ர கலசாபிஷேகத்திற்கு ஏற்பாடுகள் |
| 10-00 ,, | 1-00 | மதியம் | ஸஹஸ்ர கலசாபிஷேகம் |
| 1-00 ,, | 2-00 | ,, | சுத்தி இரண்டாவது அர்ச்சனை (ஏகாந்தம்) 2-வது மணி |

மாலை

| | | | |
|---|---|---|---|
| 2-00 ,, | 8-00 | இரவு | ஸர்வ தரிசனம் |
| 8-00 ,, | 9-00 | ,, | சுத்தி இரவு கைங்கர்யம், இரவு மணி முதலியவைகள் |
| 9-00 ,, | 11-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 11-00 ,, | 11-30 | ,, | சுத்தி முதலியவைகள் |
| | 11-30 | | ஏகாந்தசேவை (ஏகாந்தம்) |

### வியாழக்கிழமைகளில் (திருப்பாவாடா உத்ஸவம் நடைபெறுவதால்)

காலை

| | | | |
|---|---|---|---|
| 3-00 ,, | 3-30 | ,, | சுப்ரபாதம் |
| 3-30 ,, | 6-00 | ,, | விஸ்வரூப தரிசனம் |
| 6-00 ,, | 6-15 | ,, | சுத்தி முதலியவை |
| 6-15 ,, | 7-00 | ,, | தோமால சேவை (ஏகாந்தம்) |
| 7-00 , | 7-30 | ,, | தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம் |
| 7-30 ,, | 8-30 | ,, | முதல் அர்ச்சனை |
| 8-30 ,, | 9-00 | ,, | முதல் மணி, பலி, சாத்துமுறை |
| 9-00 ,, | 11-00 | ,, | சாலிம்பு, சுத்தி 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடா அலங்காரம், மணி, திருப்பாவாடா கிரஹஸ்தர்களுக்கு பஹுமானம் முதலியவை |
| 11-00 ,, | 7-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 7-00 ,, | 7-30 | இரவு | சுத்தி முதலியவை |
| 7-30 ,, | 9-00 | ,, | பூலங்கி சமர்ப்பணம் இரவு கைங்கர்யம், இரவு மணி |
| 9-00 ,, | 11-30 | ,, | பூலங்கி (ஆர்ஜிதம்) |
| 11-30 ,, | 11-45 | ,, | சுத்தி முதலியவை |
| | 11-45 | | ஏகாந்தசேவை (ஏகாந்தம்) |

### வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)

காலை

| | | | |
|---|---|---|---|
| 3-00 ,, | 3-30 | ,, | சுப்ரபாதம் |
| 3-30 ,, | 5-00 | ,, | விஸ்வரூப ஸர்வ தரிசனம் |
| 5-00 ,, | 7-00 | ,, | சாலிம்பும், நித்ய கட்டளையும், கைங்கர்யங்களும் (ஏகாந்தம்) |
| 7-00 ,, | 9-00 | ,, | அபிஷேகம் (ஆர்ஜிதம்) |
| 9-00 ,, | 11-00 | ,, | அபிஷேகானந்தார தரிசனம் (ஆர்ஜிதம்) |
| 11-00 ,, | 12-30 | மதியம் | சமர்ப்பணம் |
| 12-30 ,, | 2-00 | மாலை | தோமால சேவை அர்ச்சனை மணி, பலி, சாத்துமுறை |
| 2-00 ,, | 8-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 8-00 ,, | 9-00 | ,, | சுத்தி இரவு கைங்கர்யங்கள் இரவு மணி |
| 9-00 ,, | 11-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 11-00 ,, | 11-30 | ,, | சுத்தி முதலியவை |
| | 11-30 | | ஏகாந்தசேவை (ஏகாந்தம்) |

குறிப்பு : விழா நாட்களின்போதும், சிறப்பு நிகழ்ச்சிகளின் போதும் மேற்கூறிய நிகழ்ச்சி நிரல்கள் தேவையின் பொருட்டு மாற்றப்படும்.



இடவணரை இடத் தோளொடு சாய்த்து
இருகை கூடப் புருவம் நெரிந் தேற,
குடவ யிறுபட வாய்கடை கூடக்
கோவிந்தன் குழல்கொ டூதின போது,
மடம யில்களொடு மான்பிணை போலே
மங்கை மார்கள் மலர்க்கூந்த லவிழ,
உடைநெ கிழவோர் கையால் துகில்பற்றி
ஒல்கி யோடரிக்க ணோடநின் றனரே.

(பெரியாழ்வார் திருமொழி—3)

TIRUMALA TIRUPATI DEVASTHANAMS

# ஸப்தகிரி



மலர்: 9 ஆகஸ்ட் 1978 இதழ் 3

தனிப்பிரதி 50 காசு.
வருடச் சந்தா ரூ. 6

சிறப்பாசிரியர்:
செயலாட்சித்தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்:
திரு. கே. சுப்பாராவ், எம். ஏ.
தி. தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

முழு விவரங்களுக்கு,
Marketing Officer,
Publication Section,
T. T. D. Press Compound,
TIRUPATI-517501.

## உள்ளுறை



அட்டைப்படம்: திருமலையில் பவித்ரோற்சவம்.

# ஆசிரியர் உரை

"நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்பு பாராட்டும் உலகு"

எனும் வள்ளுவன் வாய்மொழிக்கு ஓர் உதாரணமாக, திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் செயலாட்சித் தலைவராக சுமார் நான்கு ஆண்டுகள் பணி புரிந்து தற்போது அரசுத் துறைக்குப் பதவி மாற்றஞ் செய்யப்பட்டுள்ள திரு. பி. எஸ். ராஜகோபால ராஜு ஐ.ஏ.எஸ். அவர்கள் தம் பதவிக் காலத்தில் தி. தி. தேவஸ்தான மேலாண்மைக்கு ஒரு வழிகாட்டியாக, நண்பராக விளங்கினர் எனின் அக்கூற்று மிகையாகாது. தூயகானம, கல்வி, துணிவுடைமை, அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம் இவை ஏழும் இயல்பாகவும குறைவின்றியும் தம்பால் கொண்டு நல்ல தலைவராகவும் சிறந்த செயல் வல்லராகவும் அமைந்த பெருமகனர் அவர். இயற்கையில் அமைந்துள்ள சொரூபங்களிலெல்லாம் அரிதிலும் அரிதாய் இருப்பது காலம். இவ்வுண்மையைத் தம் வாழ்நாளின் அடிப்படைப் பண்பாகக் கொண்டு காலத்துடன் ஒத்து இருந்து, அக் காலத்திற்கு முந்திக் கொண்டு தம கடமைகளை நேர்மையுடன் நிறைவேற்றினர். வாழ்க்கையில் நன்மையில் நாட்டங் கொண்டு, மேலாண்மையின் மேன்மையில் அக்கறை கொண்டு உழைத்தார்.

தி. தி. தேவஸ்தானத்தின் முதல் செயலாட்சித் தலைவராக விளங்கிய, தற்போதைய தி. தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழுத்தலைவர் டாக்டர். சி. அண்ணாராவ் அவர்கள் தம்முடைய பதவிக் காலத்தில், திருமலையில் நின்றவண்ணம் அருள் புரியும் அம் மாலவனின் பிரதிநிதியாக விளங்கும் தி. தி. தேவஸ்தானம் என்பது ஒரு சிறு நிறுவனம் அல்ல, அது ஒரு பெரிய சமஸ்தானம் என்று உலகோர் அறிந்து கொள்ளும் வகையில் தேவஸ்தானத்தின் புகழ் பரவச் செய்தார். அன்று அவர் போட்ட ஆக்கப்பூர்வமானத் திட்டங்களுக்கு திரு. பி. எஸ். ராஜகோபால ராஜு அவர்கள் தம் பதவிக் காலத்தில் வடிவம் கொடுக்கத் தொடங்கினர். டாக்டர். சி. அண்ணாராவ் அவர்களை அடுத்து, செயலாட்சித் தலைவர்களாகப் பதவி ஏற்றவர்களில் குறிப்பாக திரு. எம். சந்திரமௌளி ரெட்டி அவர்கள் தம் பதவிக் காலத்தில் கோயில் நிர்வாகம் மேலும் சிறப்புடையதாகச் செய்து, பல பதிய வேலைவாய்ப்புக்கள் ஏற்படும் வகையில் தேவஸ்தான நிர்வாகத்தை விரிவாக்கினர். பின்வர் அப்பதவியை அலங்கரித்த திரு. எஸ். வி. சுப்ரமண்யன் அவர்கள், தாம பதவி வகித்த ஓராண்டான அந்தக் குறுகிய கால வட்டத்திலும், தேவஸ்தான வரலாறு பூரிப்படையும் வகையில் இந்தியக் கலாச்சாரததின் பெருமை பேசும் கர்நாடக இசையை தேவஸ்தானத்தின் மூலம் போற்றினர், வளர்க்கவும் செய்தார்.

அன்னரைத் தொடர்ந்து ஏறக்குறைய நான்காண்டு காலம் வரை தி தி தேவஸதான செயலாட்சித் தலைவராகப் பொறுப்பேற்ற திரு பி. எஸ். ராஜகோபால ராஜு அவர்களுடைய பதவிக்காலத்தில் தி. தி. தேவஸ்தானம், காணுத பல புதுமைகளைக் கண்டது ஆம்! கல்வியின் பெருமையை உணர்ந்து அவர் பல கல்வி நிலையங்கள் வளரவித்திட்டார். மனித உள்ளத்தைச் செம்மைப்படுத்தும் வகையில், அவனுள் ஒரு பரந்த மனப்பான்மை மட்டுமின்றி, வெற்றி தோல்விகளைச் சமமாகப் பாவிக்கும் உணர்வினையும், ஒரு சகோதர மனப்பான்மையினையும் தோற்றுவிக்க எந்த ஒரு சமய நிறுவனமும் மேற்கொள்ளாத, புதுமையான ஒரு திட்டம் என்று கூறும் விதத்தில் பல்வேறு விளையாட்டுப் போட்டிகளைத் தேவஸ்தானத்தின் ஆதரவில் அனைத்திந்திய அளவில் ஒவ்வொரு ஆண்டும் நடைபெற வழி வகுத்தார். இது அவருடைய துணிவினை எடுத்துக் காட்டும். இத்திட்டத்தின் உளவியல் பின்னணி என்னவெனின், பல்வேறு போட்டிகளில் பங்கேற்கும் ஊழியர்கள் விளையாட்டு அரங்கில் மட்டுமல்ல, நாள்தோறும் திருமலையுடன் நேரடியாகவும், கடிதம் மூலமாகவும் தொடர்பு கொண்டு வரும் பல்லாயிரக்கணக்கான யாத்திரிகர்களுடன் பொறுமையுடனும், மனத்தூய்மையுடனும் ஒழுகவேண்டியதற்குரிய அவசியத்தை உணர்த்தவேயாம். மேலும் தெலுங்குக் கவிஞரும், வேங்கடவனின் பக்தருமான ஸ்ரீ தாள்ளப்பாக்க அன்னமாசார்யாவின கீர்த்தனைகளின் பெருமையைப் பரவச் செய்ய அவர் எடுத்துக் கொண்ட முயற்சிகளைத் திருப்பதி நகரம் என்றென்றும் நினைவிற்கொள்ளும். எல்லாவற்றையும்விட இந்து சமயம் சம்பந்தப்பட்ட தி. தி. தேவஸ்தான வெளியீடுகளை வெளியிடும் பணியில் குறிப்பாக 'ஸப்தகிரி' பத்திரிகையின் வளர்ச்சியில் அவர் கொண்ட அக்கறையும ஆர்வமும் வியத்தற்குரியது. தி. தி. தேவஸதானத்திற்கும் யாத்திரிகர்களுக்கும் நிலவி வரும் நல்லுறவு எச்சூழ்நிலையிலும் கெடாது விளங்கவேண்டும் என்ற ஆசையினுல் அவர் அவ்வப்போது தேவஸ்தான ஊழியர்கள்பால் காட்டிய கடுமை ஒரு தந்தைக்குரிய கண்டிப்பேயாம்.

எனவே, தம்முடைய பதவிக் காலத்தில் அவர் தேவஸ்தானத்திறகுப் புரிந்திட்ட சேவைகளையும், அவர் மேற்கொண்ட ஆக்கப்பூர்வமான திட்டங்களையும் தி. தி. தேவஸ்தானம் ஒருக்காலும் மறவாது. அவர் எங்கு இருந்தாலும், அவருடைய ஆதரவும், அன்பும். வாழ்த்துக்களும் தி. தி. தேவஸ்தானத்திற்கு, குறிப்பாக 'ஸப்தகிரி'க்கு என்றென்றும் உண்டு என நம்புகிறோம்.

# பொறுப்பாண்மைக் குழு முடிவுகள்

**15-6-78 அன்று திருமலையில் கூடிய குழு கூட்டத்தின்போது தீர்மானிக்கப்பட்ட சில முக்கிய முடிவுகள் பின்வருமாறு:**

ஆந்திரப்பிரதேச மாவட்டங்களில், அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்பட்ட 'ஷெட்யூல்ட் ஏரியா' எனப்படும் இடங்களில் பணிபுரியும் தேவஸ்தான ஊழியர்களும் சிறப்பு ஊதியப்படி பெறும்வகையில், 7-9-69 தேதியிட்ட ஆந்திர மாநில வருவாய்த்துறையின் எண். 754-எனும் அரசு உத்திரவினை தேவஸ்தானமும் அமுலாக்குவதென்று குழு முடிவு செய்துள்ளது.

ஆந்திர மாநில அரசுத் துறைகளில் 3-வது, 4-வது நிலை பதவிகளுக்காக நேர்முக தேர்வு அல்லது எழுத்து மூலம் தேர்வு ஆகியவற்றிற்காக வரும் ஷெட்யூல்டு ஜாதி மற்றும் ஷெட்யூல்டு பழங்குடியினர் இனத்தைச்சார்ந்த நபர்களுக்கு பயணப்படி வழங்கும் வகையில் விளங்கும், ஆந்திரப் பிரதேசம் வேலை வாய்ப்பு மற்றும் மக்கள் நல்வாழ்வுத் துறையின் 17-4-74 தேதியிட்ட எண். 239 எனும் அரசு உத்திரவினை தேவஸ்தானமும் பின்பற்றும் வகையில் தீர்மானம் ஒன்றினை குழு நிறைவேற்றியுள்ளது.

தி. தி. தேவஸ்தான மேலாண்மையிடம் உள்ள பல வகையான தங்கம் சம்பந்தப்பட்ட நகைகள்போன்றவை தி. தி. தேவஸ்தானத்திற்குப் பயன் படாததால் விற்றுவிடுவதென்று தீர்மானிக்கப்பட்ட மேலாண்மையின் கருத்துக்கு குழு ஒப்புதல் அளித்துள்ளது.

இந்தியாவின் முக்கிய நகரங்களில் தி. தி. தேவஸ்தானத்தாரின் புதிய தகவலறிவிப்பு நிலையங்களைத் திறக்கவும், மேலும் தற்போது சில நகரங்களில் உள்ளூர் தேவஸ்தானத்தாரின் பொறுப்பில் குத்தகைக்கு விடப்பட்டுள்ள தி. தி, தேவஸ்தானத்தாரின் திருமணமண்டபங்கள் அல்லது சத்திரங்களை மீண்டும் தானே ஏற்று அவைகளை தி. தி. தேவஸ்தான தகவலறிவிப்பு நிலையங்களைத் திறக்கவும் குழு தீர்மானித்துள்ளது.

தி. தி. தேவஸ்தான ஊழியர் சங்கத்திற்கு இலவசமாக ஒலிப்பெருக்கி மற்றும் ஸுப்ரபாத இசைத் தட்டுகளை வழங்க குழு முடிவு செய்துள்ளது.

திருப்பதியிலும், திருமலையிலும் உள்ள தி. தி. தேவஸ்தான ஊழியர்களும், அவர்களுடைய குடும்ப நபர்களும் தட்டெழுத்துப் பயிற்சி பெற உதவும் வகையில், 10 'ஹால்டா' தட்டெழுத்து இயந்திரங்களை வாங்குவதற்கு குழு ரூ. 29,246/- ஒதுக்கியுள்ளது.

திருமலையில் பணிபுரியும் எல்லா தொழில்நிலைப் பிரிவுகளைச் சார்ந்த தி. தி. தே. ஊழியர்கள், குளிர் காலத்தில் பயன் பெறும் வகையில் ஒவ்வொருவருக்கும் தலா ரூ. 100/- பெறுமான கம்பளி ஆடைகளை வழங்கவும், திருப்பதியிலும் திருமலையிலும் மத்திய வரவேற்பு அலுவலகம், விசாரணை அலுவலகங்கள். சத்திரங்கள் ஆகியத் துறைகளில் பணிபுரியும் தி. தி. தேவஸ்தான ஊழியர்கள் மழைக் காலத்திலும் வெளியில் செல்வது தவிர்க்க முடியாததாகையால் அவர்களுக்கு உதவும் வகையில் ஒவ்வொருவருக்கும் தலா ரூ. 50/- பெறுமான மழை உடுப்புகளை வழங்கவும் குழு முடிவு செய்துள்ளது.

திருப்பதியில் தி. தி. தேவஸ்தானத்தாரின் கலா க்ஷேத்திரம் ஒன்றினைக் கட்டுதற்கு திருப்பதி கபில தீர்த்தம் அருகில் 10 ஏக்கர் பரப்புள்ள நிலத்தை ஆந்திர மாநில அரசிடமிருந்து நிலவர விலைக்கு வாங்குவதென குழு தீர்மானித்துள்ளது.

தி. தி. தேவஸ்தானத்தின் உபயோகத்திற்காக நிலவர விலைக்கு 4 புதிய மோட்டார் வண்டிகளையும், 2 டீசல் ஜீப்புகளையும் வாங்குவதற்கு குழு ஒப்புதல் அளித்துள்ளது.

யாத்திரிகர்கள் தங்கள் பெயரில் திருமலையில் காட்டேஜுகளைக் கட்டுதற்கு நன்கொடை அளிக்கும் திட்டம் திருமலையில் செயல்பட்டு வருகின்றது. அது போலவே திருப்பதியிலும் 2-வது 3-வது புதிய சத்திரங்களில் தங்கள் பெயரில் யாத்திரிகர்கள், அறைகளை நன்கொடை திட்டத்தின்கீழ் கீழ்வரும் விதி முறைகளுக்குட்பட்டுக் கட்டிக் கொள்ளும் வகையில் தீர்மானம் ஒன்றினை குழு நிறைவேற்றியுள்ளது.

1. ஒவ்வொரு அறைக்காகும் முழுத் தொகையினை முன் கூட்டியே நன்கொடையாளர்கள் செலுத்துதல் அவசியம்.
2. தி. தி தேவஸ்தானம் தன்னுடைய செலவில் அவ் அறைகளை பராமரிக்கும்.
3. நன்கொடையாளர் பெயர் அல்லது அவர் விரும்பும் பெயர் சலவைக்கல்லில் (1'-6' × 2'-00') பொறிக்கப்பட்டு, கட்டப்படும் அறைக்கு முன் பொருத்தப்படும்.
4. நன்கொடையாளர்கள் இலவசமாக வருடத்தில் 60 நாட்கள் தாங்கள் கட்டிய அறையில் தங்கலாம். நன்கொடையாளர்கள் இவ் அறைகளில்தங்க ஒரு வாரத்திற்கு முன் கூட்டியே மேலாண்மைக்குத்தெரிவித்தல் அவசியம். நன்கொடையாளர்களின் குடும்பத்தைச் சார்ந்த நபர்களும் நன்கொடையாளர்களின் சம்மதத்தின் பேரில் இலவசமாக தங்கலாம். அவ்வாறு தங்கும் நாட்கள் மேற்கூறிய 60 நாட்களில் கழிக்கப்படும்.
5. நன்கொடையாளர்களுக்கு, ஒரு வேளை அவர்கள் கேட்டுக்

(37-ம் பக்கம் பார்க்க)

# சங்கரர் புகட்டும் ஹரி - பக்தி



திருமாலை முழுமுதற் கடவுளாக ஏற்று வணங்கி வழுத்தும் துதிகள் எவ்வளவோ! ஆழ்வாராதியர் தென்தமிழிலே பாடியுள்ளனர் எனில் அவர்களிலேயே குலசேகரர் சமஸ்கிருதத்தில் பாடியுள்ளார். இன்னும் நிகமாந்த தேசிகர். அஷ்டபதி எனும் கீத கோவிந்தம் பாடிய ஜயதேவர், நம்காலத்து வாக்கேயகாரர் ஆகிய முத்துசுவாமி தீட்சிதர் போன்றோரும் திருமாலை சமஸ்கிருத மொழியில் பாடிப் பணிந்துள்ளனர். இராமர், கிருஷ்ணர் மீது சதாசிவ பிரம்மேந்திரர் பாடிய கீர்த்தனைகள் உள்ளன.

இவற்றிற்கெல்லாம் முன்னோடியாக ஆதிசங்கரர் மகாவிஷ்ணுவின் மீது பாடிய தோத்திர நூல்கள் அமைந்துள்ளன. இராமாயணம், பாரதம், பாகவதம் இதர விஷ்ணுபரமான புராணங்கள் - ஆகியவற்றைக் கடந்து வந்தால், முதலில் வருபவை சங்கரர் இயற்றிய துதிகளே. அவற்றில் சில அடிகளை இங்கே காணலாம்.

அபரோக்ஷானுபூதி என்ற கிரந்தத்தின் எடுப்பு, விஷ்ணுவை வழிபடும் ஒரு சுலோகம் ஆகும். ஆரம்பத்திலே விக்ன விநாயகரை வழிபடுதல் ஒரு மரபு எனலாம். அப்படிச் செய்யாது ஆசாரியர் திருமாலை வழிபட்டுத் தொடங்கி வைக்கும் சுலோகம் வருமாறு:-

ஸ்ரீ ஹரிம் பரமானந்த முபதேஷ்டார<br>மீஸ்வரம்!<br>வ்யாபகம் ஸர்வலோகானும் காரணம்<br>தம் நமாம்யஹம்

நான் ஸ்ரீ ஹரியை வணங்குகிறேன் எனக் கூற வருபவர், திருமாலின் தனித் தன்மைகளை எளிய பதங்களில் அடுக்குகிறார். பரம இன்ப நிலையில் நிலைத்து நிற்பவர் எம்பெருமான். எனவே அவர் தம் திருப்பெயர் பரமானந்தம் என்றே ஆகிறது. கண்ணனாகி உலகினுக்கு உபதேசித்த கீதாசாரியன் ஆதலின், அவர் உபதேஷ்டா என்று பெயர் பெறுகிறார். ஈசுவரனும் அவரே. அவர்க்கு மேலே எவரும் இலர். எங்கும் நீக்கம் அற நிறைந்து நிற்பவர்; எனவே 'வியாபகம்' என்ற சொல் வியாபித்துள்ள தன்மையைச் செப்பியாகிறது.

அனைத்துலகினுக்கும் காரணம் திருமால் தாம். கரணம்-காரணம்-கர்த்தா என்ற மூன்று திருநாமங்கள் விஷ்ணு நாம வரிசையில் வருபவை.

இவ்வளவும் ஆன, அவரை - தம், நமாமி - வணங்குகிறேன், அஹம் - நான் எனப் பகவத்பாதர் திருமாலைப் போற்றிப் பாடுகிறார். இந்த ஹரியின் திருநாமத்தில் அவர்க்கு ஏன் இவ்வளவு ஈடுபாடு எனில், அந்த நாமத்தின் மகிமையே காரணம். ஹரி நாமம் இனிமையானவை அனைத்திலும் இனிமை மிக்கது. மங்கலங்களுள் மங்கலம் ஆனது; தூய்மையானவற்றுள் மிகுந்த தூய்மைவாய்ந்தது.

மதுரம் மதுரேப்யோ' பி<br>மங்களேப்யோ' பி மங்களம்'<br>பாவனம் பாவனேப்யோ' பி<br>ஹரேர் நாமைவ கேவலம்.

இனிப்பது; இன்பம் பயப்பது; புனிதம் மிக்கது ஹரி நாமம் மட்டுமே எனக் கூறும் பகவத்பாதர், இளமை முதலே இத்திருநாமத்தினை மட்டும் பாடி வருதல் வேண்டும் எனப் போதிப்பார்.

நாம் காற்று இழுத்து, மூச்சு விடுகிறோமே - இந்தச் சுவாசம் எப்போதும் நின்று விடுமோ, தெரியாது. இதன் மேல் நம்பிக்கை வைப்பதற்கில்லை. எப்போது வேண்டுமானாலும், நிற்கலாம் இந்த மூச்சு.

திரு. ர. வேங்கடரததினம்,<br>நெய்வேலி - 1

நிலவாஸே ந ஹி விஸ்வாஸ:<br>கதா ருத்தோ பவிஷ்யதி|<br>கீர்த்தனீய மதோ பால்யாத்<br>ஹரேர் நாமைவ கேவலம்||

எப்போது நிற்கும் என்று நிச்சயமாகத் தெரியாத உயிரின் மீது நம்பிக்கை வைக்காமல், இளமை தொட்டே ஹரி நாமத்தினை மட்டும் பாடி வரவேண்டும்.

பக்தியோடு பரமனைப் பாடி வரும் பக்தர் இடையே பகவான் எப்போதும் கோயில் கொண்டிருப்பார். பாடினால் மட்டும் போதாது; பக்தி பாவத்தோடு பாடியாக வேண்டும். அப்படி அடியார் பாடிப் போற்றும் இடத்தில் பரந்தாமன் நித்திய வாசம் பண்ணுகிறார் என்பது பகவத் பாதர் காட்டும் குறிப்பு;

# தங்கு வசதி விவரங்கள்

| காட்டேஜ் விவரங்கள் | கிடைக்கும் காட்டேஜ்களின் எண்ணிக்கை | நாள் ஒன்றிற்கு வசூலிக்கப்படும் வாடகை விவரங்கள் |
|---|---|---|
| **திருமலையில்** | | |
| ஸ்ரீ வேங்கடேஸ்வரா கஸ்ட் ஹவுஸ் | 30 | இரண்டு படுக்கைகளையும், ஹீட்டர் ஒன்றையும் கொண்டுள்ள அறைத் தொகுதி ஒன்றிற்கு ரூ. 16/- |
| ஸ்ரீநிவாசா காட்டேஜஸ் | 20 | மூன்று படுக்கைகளையும், ஹீட்டர் ஒன்றையும் கொண்டுள்ள காட்டேஜ் ஒன்றிற்குரூ. 20/- |
| ஸ்ரீநிவாசா காட்டேஜஸ் | 30 | மூன்று படுக்கைகளையும், ஹீட்டர் ஒன்றையும் கொண்டுள்ள காட்டேஜ் ஒன்றிற்குரூ. 15/- |
| ஸ்ரீநிவாசா காட்டேஜஸ் | | ஹீட்டர் ஒன்றுள்ள பாதி காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 9/-<br>ஹீட்டர் இல்லாத பாதி காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 7/- |
| வேங்கடாசல காட்டேஜஸ் | 16 | ,, |
| ஆழ்வார் நகர் காட்டேஜஸ் | 40 | ,, |
| வ்வேலி வ்யூ காட்டேஜஸ் | 9 | மூன்று படுக்கைகளையும், ஹீட்டர் ஒன்றையும் கொண்ட காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 16/- |
| நாராயணகிரி காட்டேஜஸ் | 12 | ,, |
| சங்கு மிட்டா காட்டேஜஸ் | 81 | இரண்டு கட்டில்களைக் கொண்ட காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 10/-<br>பாதி காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 5/- |
| சேஷாத்திரிநகர் காட்டேஜஸ் | 68 | ஹீட்டர் ஒன்றினைக் கொண்ட முழு காட்டேஜ் ஒன்றிற்கு ரூ. 12/- |
| அஞ்சநாத்ரி நகர் காட்டேஜஸ் | 78 | ஹீட்டர் ஒன்றுடன் கூடிய காட்டேஜின் 'ஏ' பகுதிக்கு ரூ. 7/- |
| கருடாத்ரி நகர் காட்டேஜஸ் | 78 | ஹீட்டர் இல்லாத காட்டேஜின் 'பி' பகுதிக்கு ரூ. 5/- |
| **திருப்பதியில்** | | |
| தி. தி. தேவஸ்தானம் கஸ்ட் ஹவுஸ் | 18 | இரண்டு படுக்கைகளைக் கொண்ட அறைத் தொகுதி ஒன்றிற்கு ரூ. 12/- |
| ஸ்ரீநிவாச சத்திரம் (மாடியில்) (மேசை நாற்காலிகளைக் கொண்ட அறைகள்) | 30 | இரண்டு படுக்கைகளைக் கொண்ட அறைத் தொகுதி ஒன்றிற்கு ரூ. 12/- |
| ஸ்ரீநிவாசசத்திரம் (கீழ்ப் பகுதியில்) (மேசை நாற்காலி வசதிகளைக் கொண்டது) | 40 | நான்கு படுக்கைகளைக் கொண்ட அறைத் தொகுதி ஒன்றிற்கு ரூ. 15/- |

**குறிப்பு:** மேசை, நாற்காலி போன்ற வசதிகள் இல்லாத சத்திரங்களில் தங்கும் அறைகள் யாத்திரிகர்களுக்கு இலவசமாக வழங்கப்படும்.

செயலாட்சித் தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

**ஹரி: ஸதா வஸேத்தத்ர**
**யத்ர பாகவதா ஜநா:|**
**காயந்தி பக்திபாவேந**
**ஹரேர் நாமைவ கேவலம்||**

அடியார் கூடி உள்ளன்போடு பாடும் இடத்தில் இறைவன் என்றுமே இருந்தருள்வார் எனும் இந்த சுலோகத்தின் கருத்து, பத்ம புராணத்தில் பகவானே பகர்ந்துள்ளமையின் எதிரொலிதான். 'நான் வைகுந்ததில் வாழ்பவன் அல்லன்; முனிவர் இதயத்துள் உறைபவனும் அல்லன். என் அடியார் எங்கே பாடுவார்களோ, அங்கே நிற்பவன் நான்' என நாரத முனிவரிடம் கூறிய பகவானின் வாக்கு வருமாறு;-

**நாஹம் வஸாமி வைகுண்டே**
**யோகினும் ஹ்ருதயே ந வை|**
**மத் பக்தா: யத்ர காயந்தி**
**தத்ர திஷ்டாமி நாரத||**

பகவான் இங்கு 'நான்' எனத் தன்மையில் பகர்ந்தருளியதைப் பகவத்பாதர் படர்க்கையில் 'பகவான் உறைவார்' எனப் புகட்டுகிறுர்.

பாட்டுப் பாடுவது எனில், அதில் காதுக்கும் வாய்க்கும் தான் வேலை. காது கொடுத்துக் கேட்பது எப்போதும் ஹரி நாமமாக இருக்கவேண்டும். குரல் கொடுத்துப் பாடுவதும் எப்போதும் திருமாலின் திருநாமம். வேறு எதையும் கேட்கவோ, பாடவோ கூடாது என்பார், அடுத்த சுலோகத்தில் ஆசாரியர். பேச்சும் அப்படியே!

**ஶ்ரூயதாம் ஶ்ரூயதாம் கர்ணே**
**நீயதாம் நீயதாம் வச:|**
**கீயதாம் கீயதாம் நித்யம்**
**ஹரேர் நாமைவ கேவலம்||**

ஹரியின் திருநாமத்திற்கு மட்டும் காது கொடு; காது கொடுத்துக்கேள். வாக்கிலே பேசு; பேசிக்கொண்டே இரு பரமன் பெயரை பாடு; ஓயாது பாடு பகவான் புற்றி!

இந்த உலகினை ஒரு பெரிய பொய்யாகக் கருதியவர் சங்கரபகவத்பாதர். உலகம் என்பது ஒன்றுமே இல்லை என்பது ஆசாரியர் கோட்பாடு. இறை

வன்தாம் நித்திய வஸ்து - தமிழில் சொன்னுல், பரம்பொருள் ஆவார்! இந்த உலகு முழுமையும் வெறும் புல் லுக்குச் சமானம். பிரபஞ்சத்தையே வெறும் புல்லாக்கி விட்டு, அவ்வள வுக்கும் மேலே தூய அறிவும் ஆனந்த மும் ஆன வடிவில் நின்று துலங்குவது ஹரியின் திருநாமம் மட்டுமேயாம்.

த்ருணீக்ருத்ய ஜகத்ஸர்வம்
ராஜதே ஸகலோபரி
சிதானந்த மயம் சுத்தம்
ஹரேர் நாமைவ கேவலம்||

சித் என்பது அறிவு; உணர்வு; சொரணை.

ஆனந்தம் என்பது உயர் இன்பம். இவற்ருேடு தூய்மையும் சேர்ந்து விடின், அந்நிலைதான் இறைநிலையாம்!

உலகினையே புல்லாக்கினுர் பரமன் என்பதில் தனியொரு ரசம்! பசுக்க ளான நாம் புல்லை மேய்ந்து கொண்டு நிற்கிருேம். பசுபதியைப் பற்ருமல், வெறும் புல்லை மேய்ந்து உலகிருேடு மாய்ந்து போகிருேம்! இதற்கெல் லாம் மேலே சென்று ஆதி சங்கரர் ஓர் இடத்தில், குரு தந்தை - தாய் - உறவினன் எனும் தகுதிக்கு வரை யறை தருவார். எப்போதும் ஹரி நாமத்தினை நினைந்து வருமாறு புகட்டு பவன் எவனே, அவனே உண்மையில் குரு என்பதற்குத் தகுதிபடைத்தவன். தந்தையும் அவனே. தாய் மற்ற பந் துக்கள் எல்லாமாக விளங்குபவன் அவனே!

ஸ குரு: ஸபிதா சாபி
ஸா மாதா பாந்தவோ'பி ஸ:|
சிக்ஷயேச்சேத்ஸதா ஸ்மர்த்தும்
ஹரேர் நாமைவ கேவலம்||

தந்தை - தாய் - தமர் எல்லாமாக இருந்துதவும் உண்மையான ஆசிரிய ஞக இருப்பவன், ஹரிநாமத்தை எப் போதும் நினைந்து வருமாறு தன் சீட னுக்கு உபதேசிப்பான். இங்கு ஆதி ஆசாரியர், ஹரிபக்தி வழியே ஆசான் பதவிக்குத் தனியொரு தகுதி வகுத் துத் தருதலைக் காண்கிருேம்.

ஹரேர் நாமைவ கேவலம் என முடியும் இந்த சுலோகங்கள் கைவல்ய அஷ்டகம் எனப் பேசப் பெறும் அரு மையான நூலில் வருபவை. இவ்வண் ணம் திருமாலினிடம் பக்தி செய்து வருதல் உய்வதற்கான வழி என்பதெல் லாம் சரி. இதற்கெல்லாம் மேலே, மிகச் சிறந்த திருமாலடியார் ஆவதற் கான வழி என்னனைக் கேட்போர்க்கு விடை தரும் இடம் வருகிறது. ப்ர-போதஸுதாகரம் நூலில் 183 வது சுலோகம். இறைவனைப் பல்லுயிர்களி லும் தரிசனம் செய்கிற பக்குவநிலை வரவேண்டும். அதேபோல் இறைவ னிடத்தே பல் உயிர்களையும் காண வேண்டும்.

ஆம், ஏற்கெனவே கீதாசாரியன் அர்ஜுனனுக்கு உபதேசித்த விஷயம் தான் இது. எவன் என்னை எங்கும் காண்பானே, என்னிடம் எதையும் காண்பானே, அவனுக்கு நான் எப் போதுமே இருந்தருள்கிறேன், அவ னும் என்னிடம் நிலைத்து நிற்பான் ஆவான். (யோம் மாம் பஸ்யதி ஸர்வ த்ர எனத் தொடங்கும் சுலோகம் 6-வது அத்தியாயத்தில் 30-வது)

ஜன்துஷு பகவத்பாவம் பகவதி
பூதானி பஸ்யதி க்ரமஸ:|
ஏதாத்ருஸி தஸா சேத்தனதவ
ஹரிதாஸ வர்ய: ஸ்யாத்||

இந்த அடிகளில் ஆசாரியர் 'க்ரமஸ:' எனக் கூறிப் படிப்படியாக முன்னேற வேண்டியதை உணர்த்துவார். உயிர் களின் இடத்தில் இறைத் தன்மையை யும் இறைவனிடத்தே பல்லுயிர்களை யும் கொஞ்சம் கொஞ்சமாகக் காணத் தலைப்பட்டு விட்டால் போதும். இந் நிலையே நீடித்து நிற்குமேயானுல், திரு மாலின் அடியாருள் மிகச் சிறந்தவன் ஆகிவிடலாம்.

ஹரிதாஸன் என்ருல் திருமாலடி யார். அவர்களுள் மிகச் சிறந்தவன் ஹரிதாஸவர்யன் ஆவான். இறை நாமத்தையே கேட்டும், பேசியும், பாடியும் வருபவன் அதற்கெல்லாம் மேலே சென்று, அன்பு உள்ளத்தோடு உயிர்கள் அனைத்தும் ஐயனின் சொரு பமே எனத் தேர்ந்து, உயிர்கள் அவ்வ ளவும் எம்பெருமானின் பல்வேறு அம் சங்களே என்று உணர்ந்து மற்றெவ் வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகி நூலோர் தொகுத்தவற்றுள் தலையா யப் பணியான பல்லுயிர் ஓம்புதல் செய்யின், இறையடியாருள் உயரிய வன் ஆவான்.

## அறிவிப்பு

சந்தாதாரர்கள் தங்களுடைய சந்தாத் தொகையினை ஒவ்வொரு மாதத்தின் 15ஆம் தேதிக்குள் மார்க்கெடிங் ஆபீஸர், பப்ளிகேஷன் செக் ஷன், தி. தி. தேவஸ்தானம் பிரஸ் காம்பௌண்டு, திருப்பதி என்ற முக வரிக்கு அனுப்புதல் வேண்டும். அப்போதுதான் அவர்களுக்கு அடுத்த மாதத்திலிருந்து 'ஸப்தகிரி' பத்திரிகையை தொடர்ந்து அனுப்ப ஏதுவாக இருக்கும். இருப்பில் பிரதிகள் இருப்பின் அம்மாதத்திலிருந்து (பணம் அனுப்பும் மாதத்திலிருந்து) ஸப்தகிரி பத்திரிகைகள் அனுப்பி வைக்கப் படும். எம். ஓ. கூப்பனில் புதிய சந்தாதாரர்கள் எந்த மாதத்திலிருந்து பத்திரிகை வேண்டும் என்பதைத் தெளிவாக எழுதுதல் வேண்டும். தொடர்ந்து தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளும் சந்தாதாரர்கள் மறக்காமல் எம். ஓ. கூப்பனில் தங்கள் சந்தா எண்களை குறித்தல் வேண் டும். ஸப்தகிரி மற்றும் தேவஸ்தான வெளியீடுகளுக்கான தொகையினை 'மார்க்கெடிங் ஆபீஸர், தி. தி. தேவஸ்தானம் பிரஸ் காம்பௌண்டு, திருப் பதி' என்ற முகவரிக்கு அனுப்புதல் அவசியம்.

# கீழ வாயில் வேங்கடவன்

நம் நாட்டின் கிழக்கெல்லை எனப் படுவது காமரூபம். அதன் பக்கத்தில் அமைந்த பெருநகரே திப்ருகர் எனப்படும் சிறப்பு நகரமாகும், இது அஸ்ஸாமின் இரண்டாவது நகர் எனப் பெருமையுடைத்து. இந்நகரின் வடக்கு வாயிலில் உள்ள உன்னதமான நவீன பாணியில் அமைந்த பெருமாளிகையில் முன்புறம் அதாவது வாயிலின் இடது புறம் அமைந்த கோயில்தான் கீழ வாயிலில் உறையும் வேங்கடவனின் தன்னிகரில்லாச் சிறப்பு பெற்ற திருக்கோயில். இதனைத் தோற்றுவித்தவர் பெருங்குடிப்பிறந்த திரு. ராம் கோபால் சஹரியா என்னும் மார்வார் ஆவார். ஆயிரத்து தொள்ளாயிரத்து எழுபத்து மூன்றும் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 24-ம் நாளில் வஸந்த பஞ்சமி தினத்தில் தோற்றுவிக்கப்பெற்றது. கோயில் நவீன தோற்றத்துடன் எழிலுருகவின் பெறும் பேரெழிலுடன் திகழ்கின்றது. நடுவே மூலவர் உற்சவர் உறைகின்றனர்கள். உற்சவரின் பக்கம் அவர்தம் உபயநாச்சிமார் உறைகின்றனர். பக்கமே அமைந்த மூன்று திருவிமானங்களின் கீழ் ஆதி பராசக்தி—தன்னிகரில்லாத் தாய்-அனைத்தையும், அனைவரையும் அணைத்துக் காப்பேன் என சிம்ஹ வாகனத்தில் அமர்ந்து அருள் திகழும் பார்வையுடன் முதல் விமானத்தின் கீழுள்ளார். இரண்டாம் விமானத்தின் கீழ் சிவன், முருகன், விநாயகர் அனைவரும் உறைகின்றனர். மூன்றும் விமானத்தின் கீழ் ராம பக்த அநுமன்-மாருதி-நின்று காட்சியருளுகிறார். அனைவருக்கும் தன்னகத்தே அணைத்து நிற்கும் பெருமையுடன் திகழ்கின்றார் மூலவர். கோயிலின் அமைப்பைக் கண்டவர் வாயில் கை வைத்து திகைப்புடனும், அதிசயத்துடனும் பார்ப்பது அக்கோயில் பளிங்கினாலான மாளிகைக் கோயில்போன்று திகழ்வதுதான். சுத்தமான பளிங்கினால் அமைந்த கோயிலின் உள் பிராகாரம் கண்டவர் போற்றும் எழிலுருவுடன் திகழும் கர்பக்ரஹம். உள் புறம் வெளிச்சம் எங்கிருந்து வருகிறதென அறிய இயலாத கட்டிட அமைப்பு இன்னோரன்ன எழிற் சிறப்புகள் கொண்டு சொல்லால் மொழியால் இயம்ப இயலாத தன்னிகரற்ற கோயிலே பாலாஜி மந்திர் எனப்படும் வேங்கடவனின் திரு இல்லம். தென்னவர் பார்த்து திகைத்தார். திகைத்தவர் பாலாஜியின் எழிலுருக் கண்டு பரவசமுறும் நேரத்தில் தென்னாட்டார் இருவர் பாலாஜியின் ஸேவையே தம் குறிக்கோளென தாய் மாநிலமான தமிழகத்திலிருந்து அனைத்தையும் இருத்தி விட்டு ஈங்கு ஸேவை செய்யும் பாங்கு மிகவும் வாழ்த்தப் பெறுவதாகும். அன்னாரின் திருப்பெயர்கள் திரு. ஸம்பத், திரு. ஸாரநாதன் எனப்படும். அவரெழுப்பும் காலை, மாலை பாடல்கள் கேட்டு உருகாதவர் இலர். இங்கு இருக்கும் தென்னாட்டவருக்கு ஒரு பெரும்பேறு இக்கோயில் இங்கமைந்ததே.

அருணசலம் என்னும் மலைப் பிராந்தியங்களிலிருந்தும், பல மைல் சுற்றுப் புறங்களிலிருந்தும் இங்கு வந்து இறைவனை தரிசிப்பவர் எண்ணிலார். சாதி மத பேதமின்றி ஒருங்குணர்ச்சியுடனும், ஒருமைப்பாட்டுடனும், தனவந்தர்-ஏழை என்ற பாகுபாடின்றி இங்கு இறைவனை தரிசித்துப்போகின்றனர். இக்கோயில் தினமும் அதி

திரு. ஜோதி மாமுனியாண்டி,
திப்ருகர் — அஸ்ஸாம்.

காலை 4 மணிக்கு சுப்ரபாதத்துடன் ஆரம்பித்து காலைப் பூஜை, மதியப் பூஜை, மாலைப் பூஜை, இரவுப் பூஜையுடன் இரவு 9 மணியளவில் மூடப் பெறுகின்றது. ஒவ்வொரு ஏகாதசி, அமாவாசை, பௌர்ணமி தினங்களிலும் திருமஞ்சனம் (அபிஷேகம்) மிகுந்த சிறப்புடன் நடத்தப் பெறுகின்றது. மூலவர், ஆபரணங்களின் சேர்க்கையால் கண்ணைப் பறிக்கும் அமைப்புடன் திகழ்கின்றார். உற்சவர் வடிவினையில்லா மலர்மகள், நிலமகளுடனுறைந்து நற்காட்சி நல்குகின்றார். மணியோசை கேட்பதற்கு இன்னோசை (இன்+ஓசை) உடைத்து. சுவாமிகள் பாடும் பாடலோசை இன்னிசை உடைத்து. இவை தவிர, சிவன் கோயில், பராசக்தி கோயில், மாருதி கோயிலில் எழுப்பப்பெறும் பாடலோசைகளும் கேட்க இன்பமளிக்கின்றது. நன்னாட்களில் இன்னாட்கள் (இன்+நாட்கள்)எனும் விதமாக அழகுக்கு அழகு சேர்ப்பது போன்று அலங்கரிக்கப்பட்டு திகழ்கின்றது கோயில். ப்ரதி வருஷமும் ப்ரும்மோத்ஸவம் பிப்ரவரித் திங்களில் கொண்டாடப்பெறுகிறது. இந்நாளில் கண்டவர் காமுறும் வண்ணம் வெங்க

(33-ம் பக்கம் பார்க்க)

## சந்தாதாரர்களுக்கு . . .

30-9-78 ஆம் தேதியுடன் சந்தாக் காலம் முடிவடையும் சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. ஆகவே அவ்வெண்கள் உடைய சந்தாதாரர்கள் தங்கள் சந்தா எண்களைக் குறித்துக் கொண்டு தாங்கள் செலுத்த வேண்டிய தொகையைச் செலுத்தி தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளவும். T

98, 188, 540, 545, 829, 1208, 1251, 1299, 1326, 1384, 1385, 1386, 1390, 1391, 1394, 1400, 1409, 2069, 2071, 2072, 2073, 2074, 2075, 2076, 2077, 2078, 2079, 2080, 2081, 2082, 2085, 2086, 2087, 2088, 2089, 2090, 2092, 2093, 2094, 2095.

# திருவேங்கடம்

திருவேங்கடம் என்பது, திருமால், உகந் தெழுந்தருளியிருப்பதும், தமிழ் வேதமாகிய நாலாயிரத் திவ்யப் பிர பந்தத்தில் ஆழ்வார் பாடல் பெற்றது மான நூற்றெட்டுத் திவ்ய தேசங் களில் ஒன்றும். தன்னையடைந்தவர் கள் பாவங்களைப் போக்குவதாலும், ஐச்வர்யங்களைப் பெருக்குவதாலும் வேங்கடம் எனப் பெயர் பெற்றது. ஸ்ரீ வேதவ்யாஸர் அருளிச்செய்த அஷ்டாதச புராணங்களில் துவாதசப் புராணங்கள், இத்திவ்ய தேசத்தை விசேஷித்துச் சொல்லுகின்றன. இதுவே, சேஷாசலம், வ்ருஷாசலம், வ்ருஷபாசலம், அஞ்சனாத்திரி, நெடி யோன் குன்றம் எனப்படும். பரம பதத்தினின்று சினத்தின் நீங்கிய பின் திருச்சுகனூர் ஸ்ரீ அலர்மேல் மங்கைத் தாயாராகிய ஸ்ரீ மஹாலக்ஷ்மியை, இங்கு ஸ்ரீ வராஹ புஷ்கரிணிக் கரை மேல் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ ஆதி வராஹ மூர்த்தியை வழி பட்டு ஸ்ரீ நிவாஸன், திருக்கல்யாணம் செய்து கொண்ட பிறகு நின்ற திருக்கோலத் துடன் எழுந்தருளியிருக்கின்றான். திரு மால் நின்ற திருக்கோலத்துடன் எழுந் தருளியிருக்கும் திவ்ய தேசங்களில் மேலானது திருவேங்கடமலையே. தொண்டரடிப்பொடி ஆழ்வார் நீங்க லாக மற்ற ஒன்பது ஆழ்வார்களும், ஸ்ரீ ஆண்டாளும், திருவேங்கடத்தை மங்களாசாஸனம் செய்துள்ளனர். ஆழ்வார்களில் தலை சிறந்தவராகிய நம்மாழ்வாரால் பிரதம பிரபந்த மாகிய திருவிருத்தத்தில், திருவரங் கம், திருவேங்கடம், திருவெஃகா ஆகிய மூன்று திவ்ய தேசங்களே மங் களாசாஸனம் செய்யப்பட்டுள்ளதால், கோயில், திருமலை, பெருமாள் கோயில் என்று விசேஷித்துச் சொல்லப் படு பவைகளில் திருமலை நடுநாயகமாய் விளங்குவதாகும். திருமணின்றிவாட்ட முற்ற திருமழிசைப்பிரான் கனவிற் றோன்றிக் கச்சித் திருவெஃகா பொய் கைப் புஷ்கரிணி வடகரையில் தோன் டின் அகப்படுமெனத் திருவாய் மலர்ந் தருளியவர் திருவேங்கடமுடையானே. "செந்தமிழ் பாடுவார்" எனக் கலியனால் புகழப்பட்ட முதலாழ்வார் கள் உகந்த இடமும் திருவேங்கடமே. மறைந்த திவ்ய பிரபந்தங்களை ஸ்ரீமந் நாதமுனியாய்த் திருவவதரித்துப் பட் டோலைப் படுத்திப் பண், தாளம் வகுத்தவரும் வேங்கடக்கோனே. எம் பெருமானார் மாதுலராகிய ஸ்ரீ ராமா யண ஆசார்யன் பெரிய திருமலை நம்பியின் திருவவதார ஸ்தலமும் வேங்கடமலையே. ஸ்ரீ அனந்தாழ் வான், பிரதிவாதி பயங்கர மண்ணன் முதலானோர் கைங்கர்யங்கள் செய்த இடமும் இத்திருமலையே. ஸ்ரீவேதாந்த தேசிகராய் அவதரித்தது திருமலைமால் திருமணியே. தீர்த்தப் பரிமளம் சேர்க்கப் பெருது ஸந்நிதி திருவாரா தனத்திற்குப் பிரதிவாதி பயங்கர மண்ணு ஸ்வாமி அருளிய தீர்த்தம் ஸ்ரீ மணவாளமாமுனிகள் புகழ் கேட்டுப் பரிமளிக்கச் செய்தவர் அணி வேங்கடவனே. மலைகளிற் சிறந்த தாகையால் திருவேங்கடம் திருமலை எனப்பட்டது. பூமி தேவியின் இரு ஸ்தனங்களில், திருமாலிருஞ்சோலையொன் றாக மற்றொன்றுவது இத்திருமலையே. இங்குள்ள விமானம் ஸ்ரீ ஆனந்த நிலய விமானம்; தீர்த்தம் ஸ்ரீ ஸ்வாமி புஷ்கரிணி; ஸ்வாமி திருநக்ஷத்ரம் ச்ரவணம்; திருவோணத்தன்றும் பாரசி யன்றும் (துவாதசி) யாவரும் எம்பெரு மானை ஸேவிப்பதாகத் திவ்யப்ரபந்தம் கூறும். அஷ்டஸ்வயம்வ்யக்த ஸ்தலங் களில் ஒன்று. புஷ்ப மண்டபம் எனப் படும். இத்தகைய வைபவங்கள் நிறைந்த ஸ்ரீ வேங்கடாசலபதியை ஸ்ரீ மஹாவிஷ்ணுவே எனத் துணிந்து கூற இயலாது எனச் சொல்கின்றனர் சிலர். அன்னார் கூறும் காரணங்கள்.

1. பேயாழ்வார், மூன்றாந் திரு வந்தாதியில் "திருமலை மேல் எந்தைக் கிரண்டுருவு மொன்றாயிசைந்து" என் றருளிச் செய்திருப்பது.



சித்திரம்: திரு. வேலு-வேலூர்.

2. திருவேங்கடமுடையானுக்குத் திருமால் சின்னங்களில்லாமல் போக ஸ்ரீ பாஷ்யகாரர், திருவாழி திருச்சங் களித்தது.

3. திருப்புகழில், வேங்கடவனை அருணகிரியார், முருகனாகப் பாடி யிருத்தல்.

இவைகட்குத் தக்க சமாதானம் கூறப்பட்டு வேங்கடவன் திருமாலே எனத் தெளியச் செய்தல்.

முதலாவதாக, ஒரு மஹரிஷிக்கவர் விரும்பியபடி திருமால் சங்கர நாரா யண ரூபியாய் ஸேவை ஸாதிக்க அவரும், வேங்கடவனும் ஒரே ஸ்ரீ மஹாவிஷ்ணு வாகையால், ஹரஹரி யாய் ஸ்ரீநிவாஸன் ஸேவை ஸாதித்த காலத்து இரண்டுருவங்களும் காணப் பட்டன என்றார் பேயார். பேயாழ் வார், "ஒரு வல்லித் தாமரையாள்

திரு. எம். வி. ஸ்ரீநிவாசன்,
முசரபாக்கம்.

ஒன்றிய சீர்மார்வன் திருவல்லிக் கேணியான் எந்தை'' என இதற்கு முன் கூறியதால், ''திருமலைமேல் எந்தைக்கு'' என்றதால் ''திருமலை எமது ஸ்வாமியான ஸ்ரீமஹாவிஷ்ணுவிற்கு'' என்று பொருள்பட்டு நிற்கும். ஆதலால், திருமலைமேல் எந்தை ஸ்ரீநிவாஸனே என்பது தெளிவாயிற்று. இப்பாசுரத்திற்கு வியாக்யான சக்ரவர்த்தியாகிய ஸ்ரீ பெரியவாச்சான்பிள்ளை வியாக்யானத்தில் 'திருமலை மேலே நிற்கிற என்னுடைய ஸ்வாமிக்கு ஒன்று ஸாதகமாய் ஒன்று ஸித்தமானால், சேராச் சேர்த்தியாய் இருக்குமோ வென்னில் இரண்டுருவும் இசைந்து ஒன்றாயிருக்கும்' '' என்று கூறுவது, காணத்தகும்.

இரண்டாவதாக ஒரு சமயம் சத்ருக்களை வெல்லத் தொண்டைமான் சக்ரவர்த்தி ப்ரார்த்தித்தபடியே அவனுக்குத் திருவேங்கடவன் திருவாழி திருச்சங்குகளை ஈந்தருளி, அவைகளின்றி ஸேவை ஸாதிக்க, எம்பெருமான் பணித்தபடி, உடையவர் திருவாழி திருச்சங்குகளை அளித்து ''அப்பனுக்குச் சங்காழி யளித்த பெருமாள்'' என்ற விருதுப் பேர் பெற்றார்.

மூன்றாவதாக, அருணகிரியார், திருப்புகழிலும், கந்தர் அநுபூதியிலும், பாடியது ஏனென்றால், முருகன் ஆறு திருப்பதிகளில் ஒன்று குன்று தோறாடல். குறிஞ்சி நிலக் கடவுளாகிய முருகன் ஒவ்வொரு மலையிலுள்ளான் எனக் கருதப்படும். திருமலை, மலைகளில் சீரியதாலும், தமிழ் நாட்டின் வடவெல்லையாதலாலும், மற்ற மலைகளைக் குறிக்காமல் வேங்கடத்தைக் குறித்து முருகனைப் பாடித் துதித்தார். இது போன்றே, அழகர் மலையாகிய திருமாலிருஞ் சோலை மலையையும் பழமுதிர் சோலையென நக்கீரரும், அருணகிரியாரும் முருகனை குறித்துத் துதி செய்தனர். அருணகிரியாரே, திருவாஞ்சியத் திருப்புகழில் ''ரிஷிகேசன், உலகின்ற பச்சையுடையண்ணன், வடவேங்கடத்தில் உறைபவன், உயர் சார்ங்க சக்ர கரதலன் மருகோனே'' எனக் கூறியிருப்பதால் ஐயமின்றி வேங்கடக் கோன், ஸ்ரீநிவாஸனே எனத்தெளியத் தகும்.

ஆழ்வார்களும், ஆசார்யர்களும், தமிழ், சம்ஸ்க்ருத ஸ்தோத்ரங்களில் திருவேங்கடமுடையான் விஷ்ணுவென்றே பாடினர். சங்க நூல்களிலும், சிலப்பதிகாரமாகிய சமண நூலிலும், சைவ நூற்களிலும் வேங்கடவன் திருமாலெனவே கூறப்பட்டுள்ளான். தமிழாதி இலக்கணமாகிய தொல்காப்பியத்தில், தமிழின் வடவெல்லை, நெடியோனாகிய திரிவிக்ரமன் நின்ற வேங்கடமெனக் கூறப்பட்டுள்ளது காணத்தகும்.

திருவேங்கடமுடையானைப்பற்றி ஸம்ஸ்க்ருத பாஷையில் அனந்தாழ்வான், பிரதிவாதி பயங்கரமண்ணா அருளிய ஸ்தோத்திரங்களும் தேசிகர் அருளிச்செய்த தயாசதகமும் உள்ளன. இன்னும், திருவேங்கடமுடையானைத் துதிக்கும் தமிழ்ப் பிரபந்தங்கள் திருவேங்கடவுலா, திருவேங்கடத்தந்தாதி, திருவேங்கடக்கோவை, திருவேங்கடவுலா, திருவேங்கடத்தான் உலா, திருவேங்கட நாதருலா, சேடகிரி மாலை, திருவேங்கட சதகம், வடவேங்கட நாராயண சதகம், திருவேங்கடவர் அநுபூதி, பஞ்சரத்னம், திருவேங்கடக் கலம்பகம் முதலியன.

நமது பாரத நாட்டில் மிக்க ஸௌந்தர்யமும் ஐச்வர்யமும் மேன்மையும் வாய்ந்தவர் ஸ்ரீநிவாஸனே. கலியுகத்தில் ப்ரத்யக்ஷ தெய்வம் திருவேங்கடமுடையானே. ஆகையால் யாவரும் திருமலையை யடைந்து ஸ்ரீநிவாஸ மூர்த்தியை ஸேவிக்கக் கடவர்.

வாழிதிரு வேங்கட மாமலை கோனேரி
வாழி யலர்மேலா மங்கைத்தாய்
—வாழியரோ
நாரணன் கோவிந்தன் நாற்றேரளன்
வேங்கடஞ்சேர்
காரணன் பூவார் கழல்.

★

## அறிவிப்பு

தி. தி. தேவஸ்தான மேலாண்மைக்குட்பட்ட கோயில்களின் புதுப்பித்தல் மற்றும் பழுது பார்த்தல் பணிகளுக்காக, தி. தி. தேவஸ்தானத்திற்கு வழங்கப்படும் நன்கொடைகளுக்கு, 1961-ஆம் ஆண்டு வருமான வரிச் சட்டம் பிரிவு 80 ஜி (2) (b)-யின்கீழ், வருமான வரி விலக்களிக்கப்படும்.

★ ★ ★

சமயப் பணிகளுக்கல்லாத தர்ம காரியங்களுக்குமட்டுமென தி.தி. தேவஸ்தானத்திற்கு வழங்கப்படும் நன்கொடைகளுக்கு, 1961-ஆம் ஆண்டு வருமான வரிச் சட்டம், பிரிவு 80 ஜி-யின்கீழ், 31-7-1978வரை வருமான வரி விலக்களிக்கப்படும்.

செயலாட்சித் தலைவர்
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

தொடர் கட்டுரை

# கீதை காட்டும்



# நல்வழி

### அத்தியாயம்–10
### விபூதி யோகம்
### பகுதி – 2

இந்தப் பரந்த பிரபஞ்சம் எவ்வாறு தோற்றத்திற்கு வந்தது என்பதைப் பகவான் கீழ்க்கண்ட சுலோகத்தில் அழகாக விளக்குகிறுர்:

மஹர்ஷய: ஸப்த பூர்வே
சத்வாரோ மனவஸ் ததா |
மத் பாவா மானஸா ஜாதா
யேஷாம் லோக இமா: ப்ரஜா: ‖ 6 ‖

''மகரிஷிகள் எழுவரும், மனுக்கள் நால்வரும் என் பிரபாவத்தோடு எனது மனதிலிருந்து உதித்தார்கள். அவர்களிடத்திருந்து உலகிலுள்ள உயிர்கள் யாவும் தோன்றின.''

சிருஷ்டியின் ஆரம்பத்தில் ஒரு நிலையில் இயற்கையில் எங்கும் ஒழுங்குப்பாடு அற்ற நிலை இருந்தது. அது இறைவன் மட்டுமே தனித்திருந்த நிலையாகும். அந்தப் பரமனிடமிருந்து முதன் முதலாக 'மனம்' வந்தது. அதாவது 'ஏகோ1ஹம் பஹுஸ்யாம்' (ஒன்ருகிய நான் பலவாக ஆகக் கடவது) என்ற எண்ணம் உருவெடுத்தது. அந்த மனத்திலிருந்து ஏழு மகரிஷிகளும், நான்கு மனுக்களும் உதித்தனர். பிருகு, மரீசி, அத்ரி, புலகர், அங்கிரஸ், கிரது, புலஸ்த்யர் ஆகியோரே அந்த ஏழு ரிஷிகளாவர். சுவாரோசிஷர், சுவாயம்புவர், ரைவதர், உத்தமர் ஆகியோர் நான்கு மனுக்கள் ஆவர். லோக பாலர்கள் இவர்களிடமிருந்து தோன்றிப் பல்வேறு உயிரினங்களை உருவாக்கினர். அவை பின்னர் விரிந்து விரிந்து பரந்த பிரபஞ்சமாக விரிவடைந்தது. ஆக 'அடிப்படையில் இந்தப் பிரபஞ்சம் யாவும் என்னிடத்திலிருந்தே உதித்தது', என்கிறுர் பகவான்.

திரு. டி. கே. நாராயணன், M.Sc.,
ஆசிரியர் ''சமய ஜோதி'' மதுரை.

முதலில் சிறிய விதை ஒன்று தான் உள்ளது. பின்னர் அதிலிருந்து முளை வெளி வருகிறது. அது சிறு செடியாகிறது. செடி பின்னர் பிரம்மாண்டமான மரமாகிறது. பிரம்மாண்டமான மரத்தையும், மிகச் சிறிய அதன் விதையையும் ஒப்பிட்டுப் பார்த்தால், ''ஆயிரக் கணக்கான பேருக்கு நிழல் தரும் இந்தப் பெரிய மரம் இந்தச் சிறிய விதையிலிருந்து வந்திருக்க முடியுமா?'' என்ற சந்தேகம் ஒருவனது மனதில் எழக் கூடும். அப்படி எழுவது இயற்கையே. ஆனுல் அந்தச் சிறிய விதையில் அத்தனை பெரிய மரம் அடங்கிக் கிடந்தது என்பது தானே உண்மை. இதை யாராவது மறுக்க முடியுமா? சரி, எவராவது இதை மறுப்பாராகில் அவரை ஒன்றும் தெரியாதவர் என்று தானே நாம் கருத வேண்டும்.



# இலட்சுமி வசிக்கும் எழுத்து

இலட்சுமி வாசம் செய்யும் எழுத்து 'ஸ்ரீ' ஆகும். பிராட்டியின் திருநாமங்களுள் மிகவும் சிறப்பு வாய்ந்தது. திருமாலுக்கு நாராயண நாமம் போல, இலட்சுமிக்கு 'ஸ்ரீ' முக்கியத்துவம் ஆனது.

ஸ்ரீ: என்பதற்கு ஆறு பொருள்கள் உண்டு. பிராட்டியின் இயல்புகளை விளக்கும் அவை வருமாறு:

1. எல்லோராலும் ஆச்ரயிக்கப்படுகிறவள். ஆச்ரயித்தல்—சரணடையப் படல்.
   ச்ரியதே இதி ஸ்ரீ:
2. தான் இறைவனை அடைந்திருப்பவள். ச்ரயதே இதி ஸ்ரீ:
3. சரணடைந்தவர் குற்றங்களை நீக்குபவள். ச்ருணுதி இதி ஸ்ரீ:
4. தன்னை வந்தடைபவர் குறைபாடுகளை கேட்பவள்.
   ச்ரணோதி இதி ஸ்ரீ:
5. தன்னை அடைந்தோரை ஏற்குமாறு இறைவனிடம் கூறுபவள்.
   ச்ருணுதி இதி ஸ்ரீ:
6. அப்படி கூறுபவைகளை இறைவன் கேட்கும்படி செய்பவள்.
   ச்ராவயதி இதி ஸ்ரீ:

இறைவன் உலகுக்கெல்லாம் தந்தை. இறைவி உலக மாதா. உலகில் தெரிந்தோ தெரியாமலோ சந்தர்ப்பச் சூழ்நிலையாலோ பல தவறுகளைச் செய்த நாம், இறைவனிடம் நெருங்க அச்சப்படுகிறோம். அதனால் கருணையே வடிவான தாயை, தயை செய்யுமாறு முதலில் அணுகுகிறோம். உலகுயிர்கள் எல்லாம் இவளை ஆச்ரயித்து வணங்கிப் போற்றுகின்றன. இத்தகு தாயின் தகவுகளை எடுத்துரைக்கும் 'ஸ்ரீ:' எழுத்தை ஏத்துவோம்.

—புலவர் சி. ஈ. எஸ். பெருமாள்.
காஞ்சீபுரம்.

'ஸப்த ரிஷிகள்' ஈசுவரனிடத்திருந்து பெற்ற ஞானத்தைக் கொண்டு உலகில் ஞானத்தைப் பரப்பி வந்தார்கள். 'எழு பிறப்பு' என்று சொல்லப் படுகிறதல்லவா. அவை ஏழு படித்தரங்களிலுள்ள ஏழு ஞான பூமிகளைக் குறிக்கின்றன. சராசரங்களாகிய உயிர் வகைகள் அனைத்தும் இந்த ஏழு ஞான பூமிகளில் அடங்கப் பெறுகின்றன. எனவே உயிர்கள் அனைத்திற்கும் மூலமாக இந்த ஏழு ரிஷிகள் அமைகிறார்கள்.

ஈசுவரனிடம் பக்தி கொண்டவர்களால் தான் இந்த உண்மையை உணர்ந்து கொள்ள முடியும். மற்றவர்களால் அல்ல.

இந்த விளக்கத்தில் நாம் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய பகுதி 'இறைவனின் மனத்திலிருந்து உதித்ததுவே இப்பிரபஞ்சம்', என்பதாம். இந்த உண்மை நம் அனைவருக்கும் பொருந்தும். பொதுவாக நமது மனமே அனைத்தையும் உண்டாக்குகிறது. நாம் எப்படி எண்ணுகிறோமோ அப்படியே ஆகிறோம். ஐம்புலன்கள் மூலம் நம் மனம் செயல்படாவிடில் நம்மைப் பொறுத்த மட்டில் இப்பிரபஞ்சம் இல்லாதாகி விடுகிறது. அது மட்டுமல்ல. துன்பத்தை இன்ப மாக்குவதும் இன்பத்தைத் துன்பமாக்குவதும் எல்லாம் இந்த மனம்தான். எனவே தான் அனைத்து யோக சாரமும், அனைத்து வேத சாரமும் இந்த 'மன அடக்கத்தில்' அடங்கி விடுகின்றன. அதற்கான பெரு வழியைத் தான் கீதை காட்டுகிறது.

ஈசுவரனுடைய இத்தகைய வல்லமையைத் தெரிந்து கொள்பவன் அடையப் பெறுவது யாது? இதோ விடை:

ஏதாம் விபூதிம் யோகம் ச
மம யோ வேத்தி தத்வத: |
ஸோ அவிகம்பேன யோகனே
யுஜ்யதே நாத்ர ஸம்சய: || 7 ||

"இந்த எனது விபூதிகளையும் யோகத்தையும் உள்ளபடி அறிகிறவன்

யோகத்தில் நிலைபெறுகிறான். இதில் எவ்வித ஐயமுமில்லை.''

மிகச் சிறிய உயிர் முதல் பிரம்மா வரை அனைத்தும் பகவானே. இதை உணர்பவன் தான் ஞானி. ஞானம் என்பது எது? 'எல்லாம் இறைவனே.' என்பதை அனுபவத்தில் உணர்தலே யாகும். இறைவன் வேறு, அவனது படைப்புக்கள் வேறு அல்ல. இறைவனே இயற்கை. இயற்கையே இறைவன். இறைவனிடமிருந்து விரிந்து வந்தது இயற்கை. இயற்கை ஒடுங்கி இறைவனிடம் அடங்குகிறது.

இயற்கை ஆராய்ச்சி என்பதும் இறை ஆராய்ச்சி என்பதும் அடிப்படையில் ஒன்று தான். இயற்கையை ஆராய்பவன் விஞ்ஞானி. இறைவனை ஆராய்ந்து அறிபவன் மெய் ஞானி. உலகப் பொருள்களை ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொள்கிறான் விஞ்ஞானி, தன்னையே ஆராய்கிறான் மெய்ஞானி. சோதனைக் குழாய் மற்றும் கண்ணாடிக் குடுவை மூலம் புறப் பொருள் ஆராய்ச்சி நடத்துகிறான் விஞ்ஞானி. மனமெனும் ஆய்வுக் கூடத்தில் புலன்களாகிய கருவிகளின் துணை கொண்டு தன்னையே ஆராய்கிறான் மெய்ஞானி. இரண்டு விதமான ஆராய்ச்சிகளின் அடிப்படை நோக்கம் ஒன்று தான். 'அனைத்திற்கும் அடிப்படையாக அமையும் அறிவை, சக்தியை அறிதல்' தான் அவர்களின் பொதுவான இலட்சியம். அதை அறிந்த பின்னர் அவர்கள் அனைத்தையும் அறிந்தவர்களாகிறார்கள். எனவே விஞ்ஞானி தனது ஆராய்ச்சியின் உச்சகட்டத்தில் தான் மெய்ஞானத்தைத் தொட்டுக் கொண்டிருப்பதாக உணர்கிறான். ஆல்பர்ட் ஐன்ஸ்டீன், ஸர் ஸி. வி. ராமன், வான் ஹம்போல்ட் போன்ற எண்ணற்ற உலகப் புகழ் பெற்ற விஞ்ஞானிகள் இதற்கு எடுத்துக் காட்டாவர்.

ஒரே மெய்ப் பொருளாகிய பகவானே இத்தனையுமாக ஆகியிருக்கிறார் என்பதனால் அவை அத்தனையும் அவருடைய விபூதிகளாக ஆகின்றன. இவ்வளவுமாகத் தன்னைத் தோற்றுவித்துக் கொண்ட பகவான் அவற்றுடன் எத்தகைய இணக்கம் அல்லது தொடர்பு வைத்திருக்கிறார் என்பதை அறிகின்ற பொழுது அவனுடைய யோகம் அறியப் படுகிறது.

ஒரு பொருளின் உண்மையான தன்மையைப் பற்றி நன்கு அறிந்து கொள்ளுபவர்கள் அதை எப்படிப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதைப் பற்றியும் நன்கு அறிந்து வைத்திருப்பார்கள். உதாரணமாக தீயின் தன்மை இன்னது என்று நன்கு அறிந்து வைத்திருப்பவர்கள் அதைச் சமைப்பது போன்ற உபயோக கரமான காரியங்களுக்காகப் பயன் படுத்துவார்களேயன்றி அதில் கையை வைத்துப் புண் ஏற்பட விட மாட்டார்கள். அதுபோல ஈசுவரனுடைய விபூதிகளையும், யோகத்தையும் உள்ள படி அறிகிற பெரு மக்கள் அவனிடத்துத் 'தளராத இணக்கம்' அல்லது 'அசையாத யோகம்' வைப்பார்கள். எவ்விதம் எண்ணெய் இல்லாது போனால் விளக்கு ஒன்று எரிய முடியாதோ அதுபோல இறைவன் இல்லாது போனால் மனிதன் ஒருவன் உயிர் வாழ்ந்திருக்க முடியாது.

இந்த சுலோகத்தில் அசையாத யோகம் (अविकम्पेन योगेन) என்ற ஒரு பதம் வருகிறது. அதற்கு என்ன பொருள்? அதற்கு விடை அடுத்த சுலோகத்தில் வருகிறது:

அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ
மத்த: ஸர்வம் ப்ரவர்த்ததே ;
இதி மத்வா பஜந்தே மாம்
புதா பாவ ஸமன் விதா: ‖ 8 ‖

'நான் அனைத்திற்கும் பிறப்பிடம்: யாவும் என்னிடத்திருந்தே உண்டாகின்றன. இதை அறியும் ஞானிகள் என்னை அன்புடன் பணிந்தேற்றுகின்றனர்.'

குடியானவன் பூமியில் பல் வகையான பயிர்களைப் பயிர் செய்கிறான். நெல், கோதுமை, கடலை, பருத்தி, உளுந்து, துவரை—இப்படி எத்தனை எத்தனையோ வகை வகையான பயிர்கள். பயிர்கள் பலவானாலும் அவை அனைத்தும் பயிராவதற்கு அடிப்படைக் காரணம் பூமி தான் என்பதை நன்கு அறிந்து வைத்திருக்கும் குடியானவன் அந்தப் பூமியைப் பண்படுத்திச் செப்

நாக்பூர் ஸர்வேஸ்வர ஆலயத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ள ஸ்ரீ ஆதிசங்கரரும், சிஷ்யர்களும்—திருமதி. சுசீலா ராஜகோபாலன்-நாக்பூர்.





திருமலை செல்லும் யாத்திரிகர் கவனிக்க:

# திருமலையிலும் திருப்பதியிலும் தங்கும் வசதிகள்

அநேகத் தர்ம சத்திரங்களை (தர்மசாலை)த் திருப்பதியிலும் திருமலையிலும். திருமலை-திருப்பதி தேவஸ் தானம கட்டியிருக்கிறது

திருமலையில நூற்றுக கணக்கான அழகிய குடில்கள் (காட்டேஜ) மிகக் குறைந்த வாடகையில் கிடைக் கின்றன. பாதிப் பகுதிக் குடில்களுக்கு வாடகை ரூ. 5/- முதல் ரூ. 9/- வரையில்; முழுக் குடில்வாடகை ரூ. 10/- முதல் ரூ. 16/- வரையில். ஐந்து உறுப்பினர்கள் கொண்ட ஒரு குடும்பம் பாதிப் பகுதிக் குடில்களிலும், 12 பேர் கொண்ட குடும்பம் முழுக் குடிலிலும் வசதியாகத் தங்கலாம்.

இத்தனை வசதிகளுடன 10,000 முதல் 15,000 யாததிரிகர் வரையில் திருமலையில் தங்கமுடியும் ஆனால் அநேக சமயங்களில் கோயிலைத் தரிசிகக வரும் பக்தர்களின் எண்ணிக்கை 25,000யும தாண்டி விடுகிறது. கடைசி நிமிஷத்தில் இடம் கிடைக்காமல் திண்டாடுவதைத் தவிர்க்க, முன் கூட்டியே குடில்களுக்கு ரிஸர்வ செய்து கொண்டுவிடுமாறு யாத்திரிகரை வேண்டுகிறோம். வரவேற்பு அதிகாரி, திருமலை-திருப்பதி தேவஸ்தானம், திருமலை (போன்: 2571) என்ற விலாசத்துக்கு ஒரு வாரம் முன்பே எழுதி ரிஸர்வ் செய்து கொள்ளவேணடும். தங்கும் வசதி கோரி எழுதும் எல்லா விண்ணப் பங்களுடனும் ரூ. 20/-க்கு டிமாண்ட் டிராப்டோ, மணியார்டரோ சேர்த்து அனுப்ப வேண்டும். கிடைக்கக் கூடிய தங்குமிடங்களை ரிஸர்வ் செய்து தரப்படும்; அதிகப்படி கட்டணம் திருப்பித் தரப்படும்.

டிமாண்ட் டிராப்டோ, மணியார்டரோ திருமலைக்குக் கிடைத்தவுடன், விண்ணப்பிததவர்களுக்கு ரிஸர்வேஷன்கார்டு ஒன்று அனுப்பப்படும். தங்குமிடங்களைப் பெற அந்த ரிஸர்வேஷன் கார்டையோ, மணியார்டர் அல்லது டிமாண்ட் டிராப்ட் ரசீதுகளையோ திருமலை விசாரணைக் காரியாலயததில் காட்ட வேண்டும்.

பொதுவாக ரிஸர்வேஷன் ஒரு நாளைக்கு மட்டுமே வழங்கப்படும். மேலும் நீடிக்க வேண்டுமானால் தங்குமிடங்கள் கிடைப்பதை அனுசரித்தே கொடுக்கப்படும்; உறுதி கூறமுடியாது.

யாத்திரிகர் தங்கள் உடைமைகளை ஜாக்கிரதையாக வைத்துச் செல்லத் திருமலையிலும் திருப்பதியிலும் தேவஸ்தான 'காப்பு அறை' வசதிகள் உள்ளன. யாத்திரிகர் சமையல் செய்ய விரும்பினால் தேவை யான பாத்திரங்களைத் தேவஸ்தானத்திலிருந்து குறைந்த டிபாஸிட் கட்டிப் பெறலாம். யாததிரிகர் ரூ. 30/- டிபாசிட் கட்டினால் காட்ரெஜ் பூட்டுகள் கொடுக்கபபடும்.

திருப்தியான தாவர உணவு வகைகளை நியாய விலையில் அளிக்கும் பல உணவு விடுதிகளைத் திருமலை-திருப்பதி தேவஸ்தானம் திருமலையில் நடத்துகிறது.

**நிர்வாக அதிகாரி,**
**திருமலை-திருப்பதி தேவஸ்தானம்**
**திருப்பதி.**

பணிடுவதில் முழுக் கவனத்தையும் செலுத்துகிருன். அதுபோல அண்ட பகிரண்டமாம் அகில சராசரத்திற்கும் ஆதி காரணம் பகவானே என்றும், அந்தப் பகவானிடத்தில் முழு மனதையும் திருப்புபவர்களுக்கே அனைத்து நன்மையும் உண்டாகும் என்பதை நன்கு அறிந்த மேலோர் தூய அன்புடன் தங்கள் மனதை அவன் பால் திருப்புகின்றனர். எனவே 'இறைவனே எல்லாம்' என்ற உயர் ஞானம் கைகூட வேண்டும். பின்னர் கணமும் அவனைப் பிரியாது அவனிடத்தில் அசையாத பக்தி கொண்டு விளங்க வேண்டும். செடி ஒன்று விதைப் பருவம் முதல் காய்த்துப் பூத்துப் பழுத்து பிறகு வாடி வதங்கிப் போகின்ற கடைசி நிலை வரையிலும் எவ்விதம் பூமியை விடாது பற்றிக் கொண்டிருக்கிறதோ அதுபோல் சான்ருேரும் எந்த நிலையிலும் இறைவனைப் பற்றியிருக்கின்றனர். அதாவது இறைவனைக் கண நேரம் கூடப் பிரியாது பற்றுமளவுக்கு யோகம் அசைவற்றதாகிறது. அத்தகைய யோகம் 'அசைவற்ற யோகம்' ஆகிறது.

கிளைக்குக் கிளை தாய்க் குரங்கு தாவுகிறது. குட்டிக் குரங்கோ தாய்க் குரங்கைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கிறது. எந்த நிலையிலும் குட்டிக் குரங்கின் பிடி சற்றும் தளருவதேயில்லை. அதுபோல துக்கமோ சுகமோ, உயர்வோ தாழ்வோ, வறுமையோ செழுமையோ, லாபமோ நஷ்டமோ எந்த நிலையிலும் உண்மையான பக்தன் இறைவனிடத்துத் தான் காட்டும் பக்தியைக் கொஞ்சமும் தளர்த்துவதில்லை. அது 'அசையாத யோகம்' ஆகிறது. அத்தகைய பக்தியும் உயர் ஞானமும் இருப்பவர்களுக்கு வாழ்க்கையில் எந்நாளும் துன்பமேயில்லை. யாண்டும் இன்பம் தான். ஏன்? துன்பம் என்று நமக்குத் தோன்றுவது அவர்களைப் பொறுத்த மட்டில் துன்பமேயில்லை. அவர்களது நோக்கில் அதுவும் இறைவனது அருட் பிரசாதமே.

வாழ்வில் ஒருவன் பிறரிடம் கொண்டுள்ள இணக்கம் பலவகைகளில் அமைவது போல இறைவனிடம் அவன் வைக்கும் இணக்கமும் பல வகைகளில் அமைகிறது. அனைத்தும் இறைவனே என எண்ணும் பக்தன் ஒருவன் எவ்விதம் நடந்து கொள்கிருன் என்பதை பகவான் அழகாக எடுத்துரைக்கிருர்.

மச்சித்தா மத்கதப்ராணு
போதயந்த: பரஸ்பரம் |
கதயந்தஸ்ச மாம் நித்யம்
துஷ்யந்தி ச ரமந்தி ச ‖ 9 ‖

"சித்தத்தை என் பால் வைத்து உயிரை எனக்குரிய தாக்கி, ஒருவர்க்கொருவர் என்னைப் பற்றி விளக்கி எடுத்துரைத்தும், யாண்டும் என்னைப் புகழ்ந்து பேசியும் சதா மன நிறைவும் மகிழ்ச்சியும் அடைந்துமிருக்கின்றனர்."

விரும்பிய பொருள்களைப் பற்றியே சதா எண்ணி நிற்றல் மனத்தின் இயல்பாகும். தாங்கள் பெற்றெடுத்த குழந்தைகளின் நல்வாழ்வைப் பற்றிய எண்ணத்தில் சதா பெற்ருேர் மூழ்கியிருக்கின்றனர். தன்னைப் பெற்று வளர்த்த பெற்ருேரின் நலத்திலேயே நாட்டமாயிருக்கின்றனர் ஒரு சில பிள்ளைகள். இதுபோல் மனைவியின் நலத்தில் கணவனும், கணவனின் நலத்தில் மனைவியும் சதா அக்கறை கொண்டு விளங்குகின்றனர். இந்த அன்பு யாவும் உலகியல் ரீதியில் அமைந்தது ஆகும். இதைப் போலவே பக்தன் ஒருவனும் சதா பகவானைப் பற்றியே எண்ணி நிற்கின்ருன்.

'உனக்காக நான் என் உயிரையே கொடுக்கத் தயார்' என்று ஒருவன் மற்ருெருவனிடம் சொல்லுவானேயாகில், அவனுக்கு வாழ்க்கையில் அதைக் காட்டிலும் பெற வேண்டிய மற்ருென்று இல்லையென்பதாகிறது. உலகியல் ரீதியில் இத்தகைய சொற்களெல்லாம் பெரிதும் சுய நலத்தையும், புலனின்பத்தையும் அடிப்படையாகக் கொண்டவையாகும். அவை பல சமயங்களில் பொய்த்துப் போகின்றன. ஒரு சமயத்தில் 'உனக்காக நான் என் உயிரைக் கொடுப்பேன்' என்று சொன்னவன் பிறிதொரு சூழ்நிலையில் தான் யாரிடம் அப்படிச் சொன்ஞனே அவனது உயிரையே பறிக்கும் சூழ்நிலையில் மாறியமைவதையும் நாம் காண்கிருேமில்லையா? ஏன்? இது சுயநலத்திலிருந்து விளைந்த போலி அன்பு. இதன் விளைவு இப்படித் தான் இருக்கும்.

ஆனல் பக்தன் பகவானிடம் வைக்கும் இணக்கமோ சுயநலமற்ற, புலன் கடந்த பேரன்பாகும். பக்தியின் உச்ச நிலையில் தான் பெற்ற பேரின்பத்தை மற்றவரும் பெறவேண்டும் என அவன் துடிக்கிருன். தான் கண்டதையும் கேட்டதையும் பிறருக்கு எடுத்து விளக்குகிருன். உயரிய பக்தி நிலையில் எந்தவித வேற்றுமையும் அவன் கண்களில் படுவதில்லை. அனைவரையும் அவன் ஒன்று போல நேசிக்கிருன். பிறர் சொல்லுவதையும் கூர்ந்து செவிமடுத்து இன்பம் அடைகிருன். எவ்விதம் உலகியலாருக்குத் திரும்பத் திரும்ப காலையும் மாலையும் உணவு உண்பதில் சலிப்பே ஏற்படுவதில்லையோ, அதுபோல பக்தனுக்குப் பகவானைப்பற்றிய பேச்சினுல் சலிப்பே ஏற்படுவதில்லை. காதலியைப் பற்றிய நினைவில் காதலன் எவ்விதம் மனநிறைவும், மகிழ்ச்சியும் அடைகிருனே, அதுபோல பகவானைப் பற்றிய நினைவில் பக்தன் மன நிறைவும், மகிழ்ச்சியும் அடைகிருன். ஆனல் முந்தையது புலனின்பத்தை அடிப்படையாகக் கொண்டது. ஏமாற்றத்திலும், துன்பத்திலும் முடியக் கூடியது. ஆனல் பிந்தியதோ புலன் கடந்த நிலையாகும். அதனுல் பெறற்கரிய பேரின்பம் தான் கிட்டும்.

(தொடரும்)

# வலம் வந்து நலம் பல பெறுவோம்

திரு. கே. எம். ஜெயராமகிருஷ்ணன்,
குமாரலிங்கம்.

மாதங்களில் சிறந்தது மார்கழி; மலர்களில் சிறந்தது மல்லிகை என்பது போல மரங்களில் சிறந்தது அரச மரம் என்பதனை பகவத் கீதையில் 10-வது அத்தியாயத்தில் 26-வது சுலோகத்தின் வாயிலாக ஸ்ரீ கிருஷ்ண பகவான் நமக்கு விளக்குகிறார்.

அஸ்வத்தஸ் ஸர்வ வ்ருக்ஷாணாம்
தேவர்ஷீணாம் ச நாரத:
கந்தர்வாணாம் சித்ரரதஸ் ஸித்தாநாம்
கபிலோ முநி:

இந்த அஸ்வத்த விருட்சம் எனப்படும் அரசமரம் நம் நாட்டில் எல்லா இடங்களிலும் இருக்கின்றது. இந்த மரம் பூவாமல் காய்க்கும் தன்மையைப் பெற்றிருத்தலால் இதனைப் 'பூவாதே காய்க்கும் மரம்' என்றும் கூறுவர். இந்த மரத்தின் கிளைகள் வெண்மையாக இருக்கும்.

நோய் நீங்கப் பெற்று உடலும், உள்ளமும் சோர்வுற்றவர்கள் இந்த மரத்தினை காலையிலும், மாலையிலும் வலம் வருகின்றனர். இதன் காரணமாக, இவர்கள் நலிவு நீங்கி வலிவு பெறுவதை நாம் கண்கூடாகக் காண்கிறோம்.

இதன் காரணம் என்ன?

மரங்களுக்கெல்லாம் அரசாக விளங்கும் அரச மரத்தின்பால் தாமிரசத்தும், மின்சார சத்தும் இருக்கின்றது என்பதனை ஆன்றோர்கள் கண்டறிந்தனர். அதனின்று எழும் காற்று தூய்மையானது என்பதனையும் உணர்ந்தனர். அதன் கூரான இலைகளின் வழியாக கீழ்நோக்கிப் பாயும் மின் அலைகள் ஈரமான உடையுடன் வலம் வருபவர் உடலின்பால் ஊடுருவி, அதன் பயனை உடலுக்கு வலிவு ஊட்டும் என்று கூறினர். அவ்வாறே, 'வலம் வந்து நலம்' பல பெற்றவர்கள் ஆன்றோர் கூறிய அமுத மொழிக்கு ஆதாரமாகத் திகழ்ந்தும் வருகின்றனர். இதோடு மட்டுமின்றி அரச மரத்தினின்றும் விழும் 'சமித்து'களை ஹோமங்களுக்குப் பயன்படுத்துவதையும் கண்டிருக்கிறோம். இதுவும் ஆன்றோர்கள் நமக்குத் தந்த அரும் செல்வமே ஆகும். அதாவது, சமித்திலிருந்து எழும்புகையை முகர்ந்து அதனால் சரீரவன்மையும், நீண்ட ஆயுளும் பெறலாம்.

இவ்வாறு மக்களின் துயர் களைந்து நிற்கும் இதனை மும்மூர்த்திகளின் உறைவிடமாக எண்ணி வழிபட்டனர் நம் முன்னோர்கள் என்பதனை,

மூலதோ பிரம்ம ரூபாய மத்யதே
விஷ்ணு ரூபிணி
அக்ரதோ ஸிவரூபாய விருக்ஷராஜா
யதே நம:

என்ற சுலோகத்தின் வாயிலாக அறிகிறோம்.

இன்னும் சில இடங்களில் அரசுக்குத் திருமணம் செய்து வைப்பதும் உண்டு. காரணம், அரசு ஆணாகவும், வேம்பு பெண்ணாகவும் சாஸ்திரங்களில் கூறுவதால் அரசுக்குத் திருமணம் செய்து வைத்து நற்பலன் பெறுகின்றனர். மார்கழி, மாசி, வைகாசி கார்த்திகை மாதங்களில் அரசுக்கு திருமணம் செய்து வைக்கலாம்.

மேலும், அமாவாசையும் திங்கட் கிழமையும்; சப்தமியும் ஞாயிற்றுக் கிழமையும்; சதுர்த்தசி திதியும் செவ்வாய்க்கிழமையும் கூடிவரும் நன்னாளில் அரசமரத்தை 108 முறை வலம் வந்து 'அசுவத்த பிரதட்சிண விரதம்' செய்து கொடிய நோய் நீங்கப் பெற்று 'நலம் பல பெற்று பலர் வாழ்வதனை' இன்றும் காண்கிறோம்.

எனவே, பல்லாண்டு காலமாய் பாரதத்தின் நாகரீக மேம்பாட்டின் நிலைக்களமாய், நீண்டு உயர்ந்த நெடு மரமாய், பல்கோடி மக்கள் துயர் களையும் நல்மரமாய், ஆற்றங்கரைகளிலே அரசிருக்கும் அருமரத்தை, மரகதமாய் மாற்றி நிற்கும் பசுமையான இலையதனை ருக்வேதமாகவும், பழங்களை யக்னுமாகவும், கிளைகளை வேத முதற் பொருளாம் விஷ்ணுவின் அம்சம் எனவும் வழிபட்டு 'வலம் வந்து நலம் பல பெறுவோம்!' ★

## ஆர்ஜித தெப்போற்சவம்

திருமலையில் வருடத்தில் மூன்று நாட்கள் நடத்தப்பட்டு வரும் தெப்போற்சவம், இப்பொழுது யாத்திரிகர்களின் விருப்பத்தை நிறைவேற்றும் வகையில், ஒவ்வொருவாரமும், செவ்வாய்க் கிழமைகளில் நடத்தப்பட்டு வருகின்றது. அன்று இறைவன் திருப்பள்ளி ஓடையில் (தெப்பத்தில்) எழுந்தருளி பக்தர்களுக்கு அருள் புரிவார். ரூ. 1500/- செலுத்தி பக்தர்களும் இவ்வார்ஜித தெப்போற்சவத்தில் பங்கேற்கலாம். பங்கேற்கும் கிருஹஸ்தர்க்கு, ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் திருவுருவம் பதித்த சுமார் 5 கிராம் எடையுள்ள தங்கப்பதக்கம் ஒன்றும், வஸ்த்ர பஹுமானமும் மேலும் நைவேத்தியமும் வழங்கப்படும். அது மட்டுமன்றி, கிருஹஸ்தரைச் சார்ந்த 10 நபர்கள், இறைவனின் தரிசனத்திற்காக அனுமதிக்கப்படுவர்.

(முன் இதழ்த் தொடர்ச்சி)

# எண் கணித சோதிடமும்....

# ....அதன் பலா பலன்களும்

### பகுதி – 5

### எண் 2–ன் தன்மைகளும் கொள்கைகளும்:

பொதுவாகச் சூரியனின் பெண் தன்மை பெற்றிருக்கும். எதிரிடையாக வாய்க்கப் பெற்ற குணங்களும், செயல்களும் மாறுபட்டிருப்பினும் எழுச்சிகளும் எண்ணங்களும் ஒற்றுமையாகவும் ஒருமித்தும் காணப்படும். எனவே அவர்கள் நண்பர்களாக சேர்த்துக்கொள்ளத்தக்க வாய்ப்புக்கள் ஏராளம் காணப்படுகிறது. எண் 2ஐ கொண்டவர்கள் பொதுவாக சாதுவாகவும் நிதானமாகவும் காணப்படுவர். கற்பனையின்பால் நாட்டம் செலுத்தி ஒருவித கனவுலகத்தில் ஒரு பக்கம் மிதந்து கொண்டிருப்பவர்களாவும் இருக்கலாம். கற்பனையை தேறு திசையில் திருப்பி ஓவியராகவும், கலா மேதைகளாகவும், முயன்ற வண்ணம் திறமையைச் செலுத்துபவர்களாகவும் இருக்கலாம். கண்டுபிடிப்புத் துறையிலும் இவர்களின் போக்கு செல்லலாம். பொதுவாக வெளிப்படையாக இவர்கள் பலவான்கள். இருப்பினும் இவர்களது குணங்களும் தன்மைகளும் மனதுக்குள்ளேதான் பரிமளிக்கும். அதாவது ஏதாவது ஒன்றை கண்டுபிடிக்கிறேன் என்று சொல்லிக்கொண்டே அவர்கள் கற்பனைக்குத்தான் முதலில் முக்கியம் தருவார்களேயன்றி ஆராய்ச்சியிலோ, தீர்க்காலோசனையிலோ லயிக்கும் வாய்ப்பும் வளர்ச்சியும் குறைவே. 1-ம் எண் கொண்டவரை இந்த எண்ணைக் கொண்டவருடன் ஒப்பிட்டுப் பார்ப்போமேயானால் இவர்கள் பிடிக்கும் பிடிவாதம் அடிப்படையில்லாத காரணத்துக்கும் விஷயத்துக்கும் ஜோடனை கட்டுவதாகவும், மணலை கயிறாகத் திரிப்பதாகவும் இருக்கும், அவர்கள் பிடிவாதத்தில் நியாயம் இருக்கும். தாம் செய்யும் செயலுக்கு இடையூறு வருமேயானால் அதை தடுத்து நிறுத்தி, அதனை தகர்த்து எறிந்து காரியத்தைச் சாதிப்பார்கள். எனவே பொதுவாக இந்த எண்ணைக் கொண்டவர்கள் ஆராய்ச்சி, மருத்துவம் போன்றவற்றில் பிரபலமாகப் பரிமளிக்க முடியாது. 2-ம் எண்ணைத் தன்பால் கொண்டவர்கள் செய்யும் பெருந்தவறு, சுயநம்பிக்கையில்லாமல் ஏனோ தானோ என்று திட்டம் தீட்டி வெகு விரைவாவோ, (கையும் ஓடாமல் காலும் ஓடாமல் செய்துவிட்டேன்) பரபரப்பாகவோ ஒரு காரியத்தை நிறைவேற்றிய திருப்தி இல்லாமல் திணறுவார்கள். பூரணத்துவத்தை அடைய முடியாத செயல்கள் வெற்றி பெறாமல் தடங்கல் பெற்று அரை குறையாக நிற்கும்போது, ஏற்படும் ஆத்திரத்தையும் த்வேஷத்தையும், பெரும் உணர்ச்சிப் போராட்டத்தையும் இவர்கள் யாரிடம் வெகுவாகவும், நெருங்கியும் பழகுகிறார்களோ அவர்கள் மீது காட்டிப் பதறுவார்கள். பின்னர் தான் செய்யும் செயல் தவறு என்று தெரிந்து வருந்தியும் மன்னிப்பைக் கோராது பிறருடன் விஷயத்தை மாற்றிப் பழக முயற்சிப்பார்கள். அதிருஷ்டவசமாகவோ என்னவோ இவர்களுக்கு நண்பர்கள் அதிகம்; அதிலும் கோபப்படாத நண்பர்கள் அவசியம் இருப்பார்கள். அதாவது சொல்லப்போனால் 2-ம் எண் கொண்டவர்களுக்கு வரும்கோபமோ, தாபமோ நிலைக்காது; வந்தால் இடிமாதிரி வரும்; சென்றால் பனிமாதிரி உருகும். அதாவது சுயநம்பிக்கை என்ற ஒன்றை இல்லை என்ற வண்ணம் இவர்கள் செய்யும் செயலும், தொழிலும் பொதுவாகக் காணப்படும். எண் இரண்டை அமைப்பில் கொண்டவர்கள் நண்பர்களாக ஏற்றுக் கொள்பவர்கள், பொதுவாகவும் சிறப்பாகவும் 1 பிறகு 7-ம் எண்ணைக் கொண்டவர்களுடன் ஆவர்.

திரு. E. S. குமரன், B.Sc.
சேலம்.

### எண்ணைக் கொண்ட தேதிகள்:

*2, 11, 20, 29* தேதிகளைக் கொண்ட எந்த மாதமாகவோ இருக்கலாம் *(1+1, 2+0, 2+9=2).*

மேலும் உச்சகாலக் கட்டமான சந்திரனின் கிரகஸ்தானம் (20 ஜுனிலிருந்து 27 ஜுலை வரை) என்ற நாட்களில் அதிக சிரேஷ்டமாக எதிர்பார்க்கும் அளவுக்கு எண்ணின் உச்ச கட்டம் ஸ்தம்பிக்கும்.

**எண்ணின் தேவதை:** சந்திரன்.

**முக்யமான தினங்கள்:** ஞாயிறு, திங்கள், வெள்ளி முதலியன.

**முக்யமான தேதிகள்:** 2,11.20,29.

**முக்யமாக வேண்டிய நட்பு:** 1,4,7-ம் எண்களைக் கொண்டவர்களுடன்.

**முக்யமான நிறங்கள்:** எல்லா நிறப் பட்டை இழைகள் (அதாவது பச்சை மட்டும்) (இளம், வெளிர், பழுப்பு பச்சை நிறங்களில்) கிரீம், வெள்ளை நிறங்கள், பொதுவாக மருட்சி தரும் நிறங்களான கருப்பு, கருஞ்சிவப்பு, ஊதா போன்றவைகளைத் தவிர்த்தல் அவசியம்.

# எங்களுடைய "ஸப்தகிரி" விற்பனைப் பிரதிநிதிகள்

திரு. கே. ராகவாச்சாரி,
நியூஸ் ஏஜெண்ட்,
ரமணி ஸ்டோர்ஸ்,
கும்பகோணம்.

திரு. வி. வி. ரங்கசுவாமி,
ஸ்ரீ வேங்கடேசாயா ரங்கநாதம் சிட்பண்ட்ஸ்,
6-14-140, கோட்டூர் (சாலை)
பாளையங்கோட்டை - R.M.S.
திருநெல்வேலி-2.

திரு. பி. கே. சுந்தரராஜன்,
21, முராரிவரதய்யர் தெருவு,
சேலம் டவுன்.

திரு. எஸ். ராமகிருஷ்ணய்யா,
ஸ்ரீ மாருதி காபி வர்க்ஸ்,
ஸ்டேஷன் ரோடு,
ஹோஸ்பெட் (அஞ்சல்) R. S.
கர்நாடக மாநிலம்.

திரு. சி. எஸ். குண்டுராவ்,
845, பி. பி. கார்டன்,
கே.ஆர். மொஹல்லா (அஞ்சல்)
மைசூர்-4.

திரு. எஸ். ஸ்ரீகாந்த ஐயர்,
7/114, செல்லாண்டி அம்மன் கோயில் வீதி.
19—வது பிளாக்
மேட்டூர் அணை ஆர். எஸ்.

திரு. ஆர். சம்பத் குமார்,
35, வனப்பட்டறை வீதி,
தெப்பக்குளம்.
திருச்சி-2

திரு. வாசு வெங்கடேஸ்வரன்,
ஸ்ரீ கண்ணன் ஸ்டோர்ஸ்,
மெயின்பஜார், எம். ரெட்டிபட்டி,
(via) அருப்புக்கோட்டை.

திரு. கே. பி. ஆர். சுவாமி,
106, மஹீம் மேன்சன்,
ஸ்டேஷன் ரோடு,
மஹீம், பம்பாய்-16.

பாஸ்கர் நியூஸ் ஏஜென்சி,
டெய்லி மார்கட்,
ஜெய்பூர் (அஞ்சல்)
கோராபுட் மாவட்டம்.

தினமணி ஸ்டோர்ஸ்,
8/1, பழைய போஸ்ட் ஆபிஸ் வீதி
கோயம்புத்தூர்-18

டாக்டர். பி. கே. கேசவன்.
செவன் ஹில்ஸ்,
2, எம்.எம்.எம். ரெட்டி வீதி
ஜோலார்ப்பேட்டை.

திரு. ஏ. அருணாசலம்,
22/13. வாளிபாளையம்.
1-வது வீதி, திருப்பூர்.

திரு. எஸ். என். கிருஷ்ணசர்மா
10-354 சின்னக்கடை பஜார்,
பரமக்குடி (அஞ்சல்)
இராமநாதபுரம் மாவட்டம்.

திரு. கே. எஸ். கோதண்ட ராமய்யா, M.A., B.O.L.,.B.T.,
ஓசூர். தர்மபுரி மாவட்டம்.

திரு. பி. விஜயேந்திரா,
நியூஸ் ஏஜண்ட்,
நகரி (அஞ்சல்)
சித்தூர் மாவட்டம் (ஆ.பி.)

திரு. ஜி. ஸ்ரீநிவாச ஐயங்கார்,
965, வெங்கோப ராவ் லேன்,
ஸ்ரீ வேங்கடேஸ்வர பெருமாள் [வீதி,
தஞ்சாவூர்.

திரு. ஏ. ரங்காச்சார்யா,
12-5-5. எஸ்.வி.என். வீதி,
பாபையா பேட்டை,
சேமன்,
வரங்கல் (அஞ்சல்) ஆ.பி.

திரு. வி. ஆறுமுகம்,
பழைய இரும்பு வியாபாரம்,
72. காந்தி மார்க்கட்,
பொள்ளாச்சி—642001.

திரு. ஏ. கே. சுப்ரமண்யம்,
நியூஸ் ஏஜெண்ட்,
பாகாலா (அஞ்சல்)

திரு. டி. எஸ். கிருஷ்ணமூர்த்தி,
சிரௌதிகள்
74, ஏ, கிழக்கு முதல் தெருவு,
மன்னார்குடி-614001.

திரு. ஏ. முனுசாமி கௌடா,
ஓல்டு போஸ்ட் ஆபீஸ் ரோடு,
முலபாகல்,
கோலார் மாவட்டம்.

திரு. டி. சீனுவாஸாசார்யா,
4, சௌந்தரம்மாள் வீதி,
லட்சுமிபுரம்,
குரோம் பேட்டை, சென்னை-44.

திரு. வி. திருவேங்கடம்,
73, காளிமுத்து பிள்ளை லேன்,
திண்டுக்கல்.

திரு. எஸ். நாகராஜகுப்தா,
நியூஸ் ஏஜண்ட் & ஜெனரல் மர்ச்சண்ட,
கிழக்கு பஸ் நிலையம்,
சித்தரதுர்க்கா.

திரு. ஏ. என். கிருஷ்ணமூர்த்தி,
157, கார்டன் ஏரியா,
ஷிமோகா.

திரு. பி. ராம்மோஹன மூர்த்தி,
28-88 ராமேஸ்வரம் அக்ரஹாரம்,
புரதொட்டூர்,
கடப்பை ஜில்லா.

திரு. வி. ஜே. ஜனார்தனன்,
11, புஜங்கராவ் வீதி,
சாலவன் பேட், வேலூர்.

திரு. ஆர். வெங்கடேசன்,
68, தெற்கு மாடவீதி,
திருவொற்றியூர், சென்னை-19.

கேப்டன். டி. இ. என். சாரி, பி.ஏ.
16, ஜி. எஸ். டி. ரோடு,
செங்கற்பட்டு—603001.

முக்யமான மணிகள் (நகைகள்): நல் முத்து, சந்திரகாந்தக்கல், இளம் பூச்சு பச்சை நிறக் கற்கள், ஜேட் (Jade) கல், பொதுவாக Jade Jemல் அணிவது சிரேஷ்டம்.

முக்யமான உடைகள் : பொதுவாக எல்லா நிறங்களைவிடப் பச்சைவரிகள், பட்டைகள் கொண்டனவாய் (ஆழ்ந்த திலிருந்து மெல்லிய நிறம் வரை) இருக்கலாம். கிரீம் நிறத்திலும் வெள்ளை நிறத்திலும் அடுத்தபடியாக உடைகள் அணியலாம். அதாவது ஆழ்ந்த கருமை, ஊதா, கருஞ்சிவப்பு நிறங்களைத் தவிர்த்தல் நல்லது. மேலும் படுக்கை அறைகளில் வெளிர் பச்சை நிறத்துணிகளையும் நிறங்களை யும் உபயோகித்தால் ஆரோக்யமும் ஆனந்தமும் பெருகும்.

சங்கீதத்தில் : உருக்கமான இசை எழுப்பும் கருவிகளான வயலின், செல்லோ, ஹார்ப், பைப் போன்ற காற்று கருவிகளின் நுண்ணிய கற்பனைச் சக்தி பரிமளிக்கும் இசையில் லயித்துவிடுவார்கள்; கடுமையான இசையில் நாட்டம் இல்லை; அவற்றைக் கேட்டால் மேலும் 'Allergy' கொள்வார்கள்.

உடற்கோளாறுபற்றி: வயிற்றுக் கோளாறு ஏற்படலாம்: ஜீரண உறுப்புக்களின் கோளாறுகள் உண்டாகும்; வாயு உபாதைக்கு அடிக்கடி இலக்கு ஆவார்கள், குடல் வீக்கம், குடல் வால் பெருக்கம், கட்டிகள், புண்கள் உண்டாகி தொந்தரை செய்யலாம். 'Ptomaine' 'Poisoning' பொதுவாக அதிகம் காணப்படும் நோய்க்குறியாகும். பித்த வாயு, பித்த சம்பந்தமான கோளாறுகள் ஏற்படுவதால் அது சம்பந்தப்பட்ட ஆகாரங்களைத் தவிர்த்தல் நலம்.

முக்யமான மாற்றங்கள்: பொதுவாக 20, 25, 29, 43, 47, 52, 65ம் வருடங்களில் உடற்சம்பந்தமான மாற்றங்கள் குறிப்பாக ஏற்படும்.

எச்சரிக்கை; பொதுவாக எச்சரிக்கையாக இருக்கவேண்டிய மாதங்கள் ஜனவரி, பிப்ரவரி, ஜூலை போன்றன. அதிக உழைப்பும், அயற்சியும், நோய்க்கு அறிகுறியான காரணத்தால் மேற் சொன்ன மாதங்களில் அவைகளைச் செய்யாதிருத்தல் நலம்.

முக்யமான இயற்கை வைத்தியம்: பச்சைக்கீரை வகைகளான முளைக் கீரை, அரைக்கீரை, அகத்திக்கீரைகள், சிவப்பு முள்ளங்கி, முட்டை கோஸ், திராட்சைப்பழம், ஆளி விதை எண்ணெய்(மேற்புறம் மட்டும்) போன்றன. வழக்கமாக கீரையை சாப்பாட்டில் வாரத்துக்கு ஒரு முறை சேர்த்துக் கொள்ளலாம், வாயு சம்பந்தப்பட்ட பதார்த்தங்களைத் தவிர்த்தல் உசிதம்.

முக்யமான நபர்கள்: நெப்போலியன் III, சார்லஸ் II, எடிசன், கிளாட்ஸ்டோன் போன்றவர்கள்.

## பகுதி – 6

### எண் 3-ன் தன்மைகளும், கொள்கைகளும்:

எண் மூன்றை தனதாகக் கொண்டவர்களின் ஆதிக்க தேவதை குரு. இந்த ஜுபிடர் ஆனவர் எண் கணித சோதிடத்திலும், சோதிடத்திலும் பெரும்பங்கு வகிக்கிறார். எண் மூன்றைக் கொண்டவர்கள் பொதுவாக 'ஒன்றைக் கொண்டவர்களைப் போல்' பேராசைக்காரர்கள். அதிகார இச்சையுடையவர்கள்; மற்றவர்களையும் ஒரு படி இறங்கியே மதிப்பிடக் கூடியவர்கள்; அதாவது தங்களுடைய

ஆதிக்கத்தைப் பிரயாசைப்படுத்தி உலகத்தினை அடிமையாக்கி அதிகார தோரணையில் கர்ஜனை செய்துகொண்டு சட்டம் பற்றியும் ஒழுங்கு பற்றியும் சதா அர்ச்சனை செய்து கொண்டு, மிலிடெரி காப்டன்களைப்போல் பொறுப்பாக நடந்துகொள்ளவும் செய்வார்கள். வெறும் வாய்ச்சவால் மட்டும் அதிகாரத்தில் இருந்துவிட்டால் இவர்களை யார் மதிப்பார்கள்? ஆனால் அப்படி வீண் அரட்டை அடிக்காமல் கடமைக்காகவும், ஒழுங்குமுறைக்காகவும், பாடுபட்டுதன்வாழ்நாளையேமேற்சொன்னவைகளின்று எழும் ஆக்க பூர்வமான சேவைகளிலும், தியாகங்களிலும் செலுத்தி சமயத்தில் மேற்சொன்ன பொறுப்பான கொள்கைகளுக்காக தங்களது உயிரையும் கொடுக்கத்தயங்கமாட்டார்கள். 'மனசாட்சி' என்று ஒன்று இல்லை என்று இவர்களிடம் சொல்லிவிட்டால் சொன்னவர்கள்பாடு படுதிண்டாட்டமாகிவிடும். தங்களுக்கென்று காணப்படும் உயரிய கடமைகளை மனப்பூர்வமாகச் செய்யும் ஆற்றலும், அதிகாரமும் இவர்களிடம் நிறைந்து காணப்படும். 'Marshal' தன்மை வாய்ந்த இவர்களது தொழிலும் அமைப்பும் வீரம் பொருந்திய வரலாறுகளாகத்தான் இருக்கும். தரை, தளம், விமானம், மற்றும் அதிகாரத் தன்மை வாய்ந்த அரசியல் உத்யோகங்களில் முக்கிய அதிகாரிகளாக இருப்பவர்களை உதாரணமாகக் காணலாம். ஆனால் இவர்களது பெருந்தவறு என்னவென்றால், சர்வாதிகாரத்தின் பக்கம் பெரும் பகுதி தோரணை செய்து வருவதால் 'சட்டம்' பற்றியே பேசியும் வற்புறுத்தியும், மற்றவர்களை வற்புறுத்துவதினால் வரும் தூஷணைகளுக்கு ஆளாவார்கள். ஆதலால் இவர்களுக்கு இரகசிய எதிரிகள் அதிகம். இவர்கள் தங்கள் அதிகார தோரணையிலேயே ஒரு படி இறங்கி காரியங்களை சாதிக்க முற்படுவாராயின் சிறந்த இராஜ தந்திரியாகலாம். ஆனால் அவற்றிற்கெல்லாம் இவர்கள் எண்ணம், செயல், இரண்டும் ஒத்து வருமா? வராது. முக்யமான நண்பர்களாகக் கருதக்கூடிய எண்களின் வரிசைகள் 3,6,9ன் கூட்டுத்தொகைகள். உச்சகாலக் கட்டங்கள் என்று சொல்லக் கூடிய ஸ்திதிகள், பிப்ரவரி 19லிருந்து மார்ச் 20-27 வரை, அல்லது நவம்பர் 21 லிருந்து டிசம்பர் 20-27 வரை. அதாவது மேற் சொன்ன மாதங்களில் இவர்கள் கடமைகள் நிறைவேறலாம்.

முத்துப்பல்லக்கு வாகனத்தில், தேவியருடன் ஸ்ரீ கோவிந்தராஜசுவாமி, திருப்பதி.



### எண்ணைக்கொண்ட தேதிகள்;

3,12,21,30ஐக் கொண்ட எந்த மாதமாயினும் சரி, அல்லது உச்ச காலக் கட்டங்களைக் கொண்ட இரண்டு மாதங்கள்;

### எண்ணின் தேவதை

குரு (Jupiter),

### முக்யமான தினங்கள்

வியாழன், வெள்ளி மற்றும் செவ்வாய்.

### முக்யமான தேதிகள்

3, 6, 9, 15, 18, 24, 27 தேதிகளைக் கொண்ட எந்த மாதமாயினும் சரி; இவற்றில் எந்த தேதிக்கும் மூன்றுக்கும் அதிக ஒற்றுமை இருப்பதால் 3, 12, 21 போன்ற தேதிகளின் பலனையே ஏறு வரிசை எண்களான, 3, 6 9, 12, 15 போன்றவைகள் அளிக்கும் என்பதில் ஐயமில்லை;

## முக்யமாக வேண்டிய நட்பு

ஏறுவரிசை எண்களின் சொந்தக் காரர்களான 6, 9ஐக் கொண்டவர் களுடன்.

## முக்யமான நிறங்கள்

ஊதா, செந்நீலம் போன்றவற் றிலோ, இரண்டாந்தரமாக கருஞ் சிவப்பு, நீலம், இளஞ்சிவப்பு நிறங் களிலோ அதிக நாட்டமும் கவர்ச்சியும் இருத்தல் அவசியம்:

## முக்யமான மணிகள் (நகைகள்)

ஊதா நீலம் கொண்ட 'செவ்வந்திக் கல்' என்று (Amethyst) சொல்லப்படு கிறவற்றைப் பதித்து நகைகளோ, மோதிரங்களோ அணியலாம்.

## முக்யமான உடைகள்

செந்நீலம், ஊதா இழைகள் அல் லது வரிப்பட்டைகள் கலந்த ஆடைகள் பொதுவாக ஆடவர்களுக்கு அவ் வளவு எடுப்பாக இருக்காத காரணத் தினுல் மெல்லிய இழைகளைக் கொண்ட வற்றிலோ, கைக்குட்டைகளிலோ இந்நிறத்தை பிரயோகிக்கலாம்.

## சங்கீதத்தில்

உரத்த சங்கீதத்தில் அதிக நாட்டம் காணப்படும். போர் முரசு, அறை கூவல் Pipe போன்ற, பலத்த கருவி களின் ஓசையின்பேரில் அலாதி பிரியம்: உணர்ச்சிக்கு ஊக்கம் ஊட்டி உற்சாகப் படுத்தச் செய்யும் Band இசை போன்ற வைகளில் ஈர்ப்புச்சக்தி காணப்படும்:

## உடற் கோளாறுபற்றி

அதிகமான உழைப்பினுலும், தீராத அலைச்சலினுலும் ஏற்படும் அதிக நரம்புத்தளர்ச்சி: இதற்குக் காரணம் எடுத்த செயல்களில் திருப்தி இல்லா மல் சதா குழப்பிக் கூக்குரலிட்டு அதிக சிரத்தையை சிறிய விஷயங்களுக்கும் கொடுப்பது. அடிக்கடி பலத்த அதிர்ச்சியினுல் நரம்பு விக்கம், கீல் வாயு, (Sciatica) மற்றும் புறத்தோல் கோளாறுகள் போன்ற நோய்க் கோளாறுகள் உண்டாகும்.

## முக்யமான மாற்றங்கள்

செப்டம்பர், டிசம்பர், பிப்ரவரி, ஜுன் மாதங்களில் இவர்கள் உடற் சம்பந்தமாக 12,21,39,48, 57வது வருடங்களில் மாற்றங்கள் ஏற்படும்.

## எச்சரிக்கை

தனக்கு நோய் அதிகமாகிவிட்டதே என்பதே இவர்களுக்கென்று ஒதுக்கப் பட்ட 'Special Disease'. மனிதன் என்றுல் 'நோயும் நொடியும் சகஜம்' என்று பரிகாரம்தேடி மேலும் அதனுல் துன்புறுமல் இருப்பதற்கு முயற்சி செய்வது இந்த எண்ணைக் கொண்ட வர்களுக்கான 'அறிவுரை'யாகும்.

## முக்யமான இயற்கை வைத்தியம்

பீட்ரூட், செர்ரீ பழம், ஜாதிக்காய், மாதுளம்பழம், திராட்சை, அன்னுசி, அத்தி, பாதாம்பருப்பு, மிளகு, இல வங்கம், குங்குமப்பூ, ஆப்பிள் மற்றும் கோதுமைப் பண்டங்களை அவ்வப் போது முக்யமாக உணவுடனே, வேறு முறைகளிலோ உபயோகித்தல் உசிதம்.

## முக்யமான நபர்கள்

ஆப்ரகாம் லிங்கன், ருட்யார்ட் கிப் லிங்க், வின்ஸ்டன் சர்ச்சில், மார்க் டிவைன் போன்றவர்கள் 3ம் எண்ணைத் தன்பால் கொண்டவர்கள்.

(தொடரும்)

ஸ்ரீதேவி பூதேவி சமேத ஸ்ரீ ரங்கநாதர்-ஸ்ரீ ரங்கநாதஸ்வாமி கோயில் பெங்களூர்:
திரு. என். வாசுதேவராஜு பெங்களூர்:



# திருவேங்கடவனின் திருவருள் தேவி



திரு. எஸ். வி. ராமசுவாமி,
செகந்திராபாத்

'இடுக்கண்களைத் தீர்க்கும் எம் பிரான் வேங்கடவன்' என்று அவன் அருளை (திருவருள் தேவியை) நாடி கோடிக்கணக்கான மக்கள் திருமலை வருவது கண்கூடு. நாட்டு ஜனாதிபதி முதல் கடைநிலை ஊழியர்கள் என்று அதிகாரம்பெற்றவர்கள், ஏழை எளிய வர்கள் என்று பலதரப்பட்டவர்கள், பணக்காரார்கள், ஏழைகள், நோயாளி கள், நோய் நீக்கும் மருத்துவர்கள் எல்லோருமே அவ்வருள் தேவியைத் தேடி வருகிறார்கள் :

ஏன் ?

இவர்களையும், எல்லாவுலகங்களை யுமே படைத்த பிருமதேவன் குறை வற்ற எவனையும் படைக்கத் திறனற் றவனா ?

'' ஆம் '' என்கின்றான் இக்கவிஞன்.

உலகம் யாவையும் படைக்கலாம். படைப்பினங்கள் தம் தம் விதிப்படி இயங்கி முடியலாம். இவ்விரண்டு பணிகளையும் பிரமனுக்கும் சிவ னுக்கும் விட்டு திருமால் காக்கும் பணியை மேற்கொண்டான் என்பதே மறை, புராணங்களின் முடிவு.

'' ரக்ஷிப்பது'' என்பது ஜனன மர ணங்களிலிருந்து விடுபட்டு மோக்ஷத் தைக் கொடுப்பதேயாகும் என்று திருமால், மோக்ஷங்கேட்பவர்களுக்கு அதற்கேற்றதகுதி உண்டுபண்ணி அவர் களுக்கு மோக்ஷமளித்து வந்தான்.

நாளுக்கு நாள் மோக்ஷம் கேட்பவர் களே வரவில்லை.

ஏன் ?

வாழ்க்கையை, பிரமன் விதிப்படி வாழ்ந்து மரணமடைவதே நியதியாய் போய்விட்டது. வாழ்க்கைத் துன் பங்களையும் ''தலையெழுத்து'' என்று ஏற்கலாயினர் மக்கள்.

இந்நிலையில்தான் எம்பெருமான் உள்ளத்தில் தயாதேவி உதயமா கின்றாள்.

''விதி வழி வாழும் மக்களுக்கு அருள் செய்து அவர்கள் விதிப்படி அநுபவிக் கும் துன்பங்களையும் போக்கி ''நீ ரக்ஷிப்பாய்'' என்ற ஒரு நம்பிக்கை யைத் தூண்டினால்தானே அவர்கள் நிறை வாழ்வுபெற்று மோக்ஷத்தையும் விரும்புவார்கள்'' என்றாள் தயா தேவி.

''அதற்காக'' என்கின்றார் பகவான்.

''புறப்படுங்கள்''

''எங்கே?''

'' திருமலைக்கு''

மறுகணம் தயா தேவி நிறைந்த எம் பிரான் திருவுளம் பூவுலகின் திரு மலையை நாடியது. ஸ்ரீனிவாஸனாய் விளங்குகின்றான். விதியினால் வரும் உலகத் துன்பங்களையும் தன்னைப் ப்ரார்த்திப்பதால் போக்கலானான்.

மக்கள் குழுமினார்கள். தங்கள் வாழ்க்கைக்குறைகளையெல்லாம் நீங்க அவனே கதி என்று உணர்ந்து அவனை நினைத்தே மோக்ஷமும் அடைகின்றனர்.

இவைகளுக்கெல்லாம் காரணம் திரு வேங்கடவன் திருவருள்தேவியே என்று பேசுகின்றார் கவி ஸார்வபௌமன் இந்த ஸ்லோகத்தில்:

''பிரும்மா விதிக்கும் செல்வபோகங் களும் இன்ப துன்பங்களும் நிலை யற்றது என்று உன் அருளால் அறிந்த பாக்யசாலிகள், எம்பெருமான் ஸ்ரீனி வாஸனை அண்டி ப்ரார்த்தித்து இவ் வுலகத் துன்பங்களைப் போக்கிக்கொள் வதோடன்றி மோக்ஷத்தையும் அடை கிறார்கள்.''

''ஆக்ஞாம் க்யாதிம் தநமநுசராந்
ஆதி ராஜ்யாதிகம் வா
காலே த்ருஷ்ட்வா கமலவஸதே
ரப்யகிஞ்சித் கராணி
பத்மா காந்தம் ப்ரணிஹிதவதீம்
பாலநே நந்யஸாத்யே
ஸாராபிஜ்ஞா: ஜகதி க்ருதிந:
ஸம்ச்ரயந்தே தயே த்வாம்.'' *(41)*

இவ்வுலக வாழ்க்கைக்குறைபாடு களை நீக்கமட்டும்தான் மக்கள் திரு வேங்கடவனிடம் வருகின்றனரா? சில தெளிந்த ஞானிகளும் ஒரு பலனை யும் வேண்டாதுவேங்கடவன் குளிர்ந்த பார்வை ஒன்றே போதும் என்று என ஏங்குகின்றார்களே ஏன்?

உலக இன்பங்கள் பிரும்மனின் உயர்ந்த பிரும்மானந்தம் யாவும் ஒரு நிலையற்ற ஆனந்தானுபவமே.

தயாதேவி நிரம்பிய அவன் திரு வுள்ளம் அவன் அமுத பார்வை என்றுவது திருமலையிலுள்ள, ஸ்தாவர ஜங்கமமோ ஏதாவது ஒரு பொருள் மீது படாதா? அந்தப் பொருளாய் நான் பிறக்கமாட்டேனு? ஏன்? என் றுமே அழியாத மோக்ஷம் என்ற ஆனந்த நிலையல்லவோ அதனுல் கிட்டும்.

''படியாய்க் கிடந்து உன் பவளவாய்
காண்பேனே''
''திருவேங்கடச் சுனையில் மீனுய்ப்
பிறக்கும் விதியுடையா
னுவேனே?''
''திருவேங்கடமலையில் ஏதேனு
மாவேனே''

இப்படி யெல்லாம் மனுேரதித்துப் பேசும் குலசேகராழ்வார் வழி நின்று இந்த ஸ்லோகம் இக்கவிஞன் பால் உருவாகியதுபோலும்:

''ப்ராஜாபத்ய ப்ருப்ருதிவிபவம்
ப்ரேக்ஷ்ய பர்யாய துக்கம்
ஜன்மா காங்ஷன் வ்ருஷகிரிவதே
ஜக்முஷாம் தஸ்த்துஷாம் வா
ஆகாஸாநாஃ கதிசினவிபோஸ்த்வத்
பரிஷ்வங்கதந்யைஃ
அங்கீகாரம் க்ஷணமபி தயே ஹார்த்த
துங்கைஃ அபாங்கைஃ (42)

இயற்கையழகு மலிந்தது திரு வேங்கடமலை. காட்டாறுகள், நோய் போக்கும் ஆயிரக்கணக்கான 'மூலிகை கள், வானளாவும் மரங்கள் யதேச்சையாகத் திரிந்து விளையாடிக் கொக்கரிக்கும் பட்சிக் கூட்டங்கள் ஆகியவை அடங்கிய இச்சந்நிதியில் தான் தயா தேவி வசிக்கின்றுள்.

அது ஒரு குளிர்ந்த பொய்கை. நீண்டு ஒளியுடன் பிரகாசிக்கும் தாம ரைமலர் அப்பொய்கையான திருவேங்கடவன் திருவுந்தியில் விளங்குகின்றது. திருமேனியின் ஒளி நீலக்காந்தி அப்பொய்கையின் நீலோற் பலங்களாய் காட்சியளிக்கின்றன. ஸம்ஸார தாபத்தைப் போக்கப் பெரி யோர்கள் அக்குளிர்ந்த பொய்கையில் நீராடிக் குளிக்கின்றனர். இத்தகைய குளிர்ந்த விசாலமான தெளிந்த பொய்கையான திருவேங்கடவ னல்லவா உனக்கிருப்பிடமாகின்றுன்.

இப்படி திருவேங்கடவனை ஓர் உன் னதப் பொய்கையாகவும் எல்லோரா லும் அடையத்தகுந்ததாயும் சித்தரிக் கும் கவிஞன் ஆங்கே தயாதேவியும் வாசம் செய்வதைக் காட்டி சாதாரண நம் போன்ற மக்களையும் பயமின்றி திருமலைக்குச் சென்று ஸ்ரீனிவாஸன் அனுக்ரஹ அனுபவம் பெற்றுக் குளிர லாம் என்பதுபோல் பேசும் ஸ்லோகம் இது:

''நாவீபத்ம ஸ்ப்புரணஸுபகா நவ்ய
நீலோத்பலாபா
க்ரீடாசைலம் கமபி கருணே வ்ருண
வதி வேங்கடாக்யம்
சீதாநித்யம் ப்ரஸதநவதி ச்ரத்த
தாஞவகாஹ்யா
திவ்யாகாசித் ஜயதி மஹதி தீர்க்கிகா
தாவகிநா''|| (43)

''எல்லாவற்றிலும் உயர்ந்த இன்பம் எது?'' ''ஆனந்த அனுபவம் எது?'' என்று, வேதாந்தங்கள் (உபநிஷத்துக் கள்) ஆராய்ந்து முடிவு கட்டின. அது பரமபதமாகிய [illegible] வரும் ஆனந்தமே என்று.

அந்த பரமபதம் நித்யம் ஞானம் அனந்தம் என்றது. மற்ற அசேதனப் பொருள்களைப்போல் மாறுபடாதது. ஜீவன்களைப்போல் ஞான ஸங்கோச விகாசங்களற்றது. குற்றங்களும் அற்றது. ஒரு காலத்தில் ஒரு வஸ்துவில் ஒரு இடத்தில் என்று காலத் திலும், உருவத்திலும் ஸ்தானத் திலும் கட்டுப்படாதது பழமைக்கும் பழமை, புதுமைக்கும் புதுமை யானது.

என்றபடியெல்லாம் பேசப்படும் பர ப்ரம்மம் இதுவென்று தெளிந்து அதனை இமைப்பிலராய்க்கண்டு எப்பொழுதும் ஆனந்தத்திலிருப்பவர் நித்யஸூரிகள் (ஸதா பச்யந்திஸூரய:)

ஆனந்தக் கடலைக் கண்ட அப்பெரி யோர்கள் மற்ற எந்த சுகத்தையும் ஒரு குளப்படியாகவே காண்பர்.

அவர்களுக்கும் கூட இப்பரப்ரும் மம் கருணையினுல் தன்னை அவர்களுக் குக் காட்டி அவர்களுக்கு ஆனந்

'விஷ்ணு துர்க்கை'
(டெர்ர கோட்டா வேலைப்பாடு)
திரு. கே. சீதாராம்-கோவை.



தத்தையளிக்குமேயன்றி அவர்களாகக் கண்டு ஆனந்தமடைந்து விடமுடியாது.

''நின்ன பாதம் நினைப்பதாக நீ நினைக்கவேணுமே'' என்பதல்லவா ஆழ்வார் அனுபவம்.

ஆகையால் அவன் திருவுள்ளத்தில் காணும் கருணையென்னும் இத்தயா தேவி அவனை வசப்படுத்திக் கொண்டு அவனை அளிப்பதற்குக் காரணபூதை யாகின்றாள்.

அப்பெரியோர்களும் இத்தயாதேவியின் உதவியையே நாடுகின்றனர்.

''யஸ்மிந் த்ருஷ்டே ததிதர ஸுகைர்
கம்யதே கோஷ்பதத்வம்
ஸத்யம் ஜ்ஞானம் த்ரிபிரவதிபிர்
முக்தமாநந்த ஸிந்தும்
த்வத்ஸ்வீகாரத் தமிஹ க்ருதிந:
ஸௌரி ப்ருந்தாநுபாவ்யம்
நித்யாபூர்வம் நிதிமிவ தயே நிர்வி
சந்த்யஞ்ஜநாத்ரௌ'' (44)

முன்பு தயா தேவியை ஓர் பொய்கைக்கு ஒப்பிட்டு மகிழ்ந்தான். ஆனால் அவ்வுவமையில் இக்கவிஞன் மன நிறைவு காணவில்லை. தயாதேவியை ஈண்டு மேகங்களுக்கு ஒப்பிட்டு மகிழ்கின்றான்.

மேகங்கள் நீலநிற கடலின் நீரை வாரி உட்கொண்டு உயர்ந்த மலைச் சிகரங்களில் படிந்து நிற்கும். காலம் கண்டு உண்ட நீர்ப் பெருவெள்ளத்தை உலகில் பொழியும். வேண்டுதல் வேண்டாமையின்றி உலக மக்கள் யாவருமே வாழ வேண்டிப் பொழியும்.

சாதிச் சமய வேற்றுமையோ, பாபிகள், புண்ணியவான்கள் என்ற வேறுபாடின்றி, திருமலையை அடைந்து பெருமானை வழிபடும் அக்கணத்திலேயே ஸ்ரீனிவாஸன் திருவுள்ளத்தில் நிறைந்துவிடுகின்றாய். எப்படி நிறைகின்றாய். ஸ்ரீனிவாஸன் என்னும் நீலக் கடலின் அவன் குணங்களாகிய அமுத வெள்ளத்தை நிரப்பித் தோன்றுகின்றாய். அவ்வெம்பிரான் திருக் குணங்களாகிய ஸௌசீல்ய, வாத்ஸல்ய, ஸௌஹார்த்த, ஸாம்ய, மாதுர்ய, ஔதார்யாதி வெள்ளத்தை வாரி, வழிபடும் எல்லா மக்கள் மேலும் பொழிகின்றாய். இதனால் இறைவன் குணாதிசயங்கள் தெளிந்து வழிபடும் மக்கள், ஒப்பற்ற 'கருணை' என்னும் உன் தோற்றத்தால் தேவைகளாகிய எல்லாத் தாபங்களும் நீங்கும்படி அவன் அருளாகிற குளிர்ந்த வெள்ளத்தில் மூழ்கி இன்பமடைகின்றனர்.

''ஸாரம் லப்த்வா கமபி மஹத:
ஸ்ரீநிவாஸம்புராசே:
காலே காலே கந ரஸவதீ காளிகே
வாநுகம்பே
வ்யக்தோந்மேஷா ம்ருகபதிகிரௌ
விச்வமாப்யாயயந்தீ
சீலோபஜ்ஞம் க்ஷரதி பவதீ சீதளம்
ஸத்குணௌகம்'' (45)

(தொடரும்)

## அறிவிப்பு

திருமலையில் காட்டேஜுகளுக்காக முன்பணம் செலுத்தி, தனி ஒதுக்கீடு (Reservation) செய்து கொள்ளும் யாத்திரிகர்களின் நன்மைக்காக, மேலாண்மை கீழ்வரும் சலுகைகளை அளித்துள்ளது.

1. காட்டேஜுகளுக்காக தனி ஒதுக்கீடு செய்து கொண்ட தேதிகளுக்குள் சம்பந்தப்பட்ட யாத்திரிகர்கள் நாட்கழித்து வந்தாலும், மீதம் இருக்கும் நாட்களுக்கு, அவர்கள் கணக்கில், வராத நாட்களுக்குரிய கட்டணத்தைப் பிடித்துக் கொண்டு, மீதித் தொகைக்கு அவர்களுக்கு இட வசதி அளிக்கப்படும்.

2. காட்டேஜுகளுக்காக முன் பணம் அனுப்பியவர்கள், தாங்கள் கோரியபடி தங்கள் பெயரில் ஒதுக்கீடு செய்யப்பட்ட நாட்களை, சூழ்நிலைக் காரணமாக மாற்றிக் கொள்ள நினைத்தால், அவர்கள் இரண்டு நாட்களுக்கு முன்பேயே, (அதாவது ஒதுக்கீடு செய்யப் பட்ட தேதிக்கு முன் இரண்டு நாட்கள்) இது சம்பந்தமாக விண்ணப்பித்துக் கொள்ள வேண்டும்.

3. காட்டேஜுகளுக்காக முன் பணம் செலுத்தியவர்கள் தங்களுக்கு வழங்கப்பட்ட தனி ஒதுக்கீடு தேதிகளில் வர இயலாது, செலுத்திய தொகையைத் திருப்பிப் பெற வேண்டுபவர்கள், தங்கள் எண்ணத்தை, ஒதுக்கீடு செய்யப்பட்ட தேதிக்கு இரண்டு நாட்களுக்கு முன்பேயே, விண்ணப்பம் ஒன்றன் மூலமாக தெரிவித்தல் வேண்டும்.

செயலாட்சித் தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

# செவ்வாய்



நவக்கிரக மண்டலத்தில் சூரியனுக்கு அருகில் அவனைத் தொடரும் மூன்ருவது கிரகமாக விளங்குபவன் செவ்வாய். சிவந்த இவனது நிறம் காரணமாக செம்மீன் எனவும் பெயர் பெற்ருன். மற்றும் இவனுக்கு மங்களன், பௌமன், குசன், அங்காரகன், சேய், அழல், கனல், பூமகன் என்ற காரணப் பெயர்களும் உண்டு.

'' காய்சின வெய்யோன் சேயோன்
முன்செல......''

என்ற திருவிளையாடற்புராண அடிவழி இவன் சூரியனுக்கு அருகு இருப்பவன் செஞ்சடையோனுல் உருவாகிய சேய் என அறிகிருேம்.

அதாவது சிவனின் நெற்றிக் கண் வியர்வையில் தோன்றி பூமகளால் வளர்க்கப்பட்டு பூமகன், நிலமகன் என்ற பெயர்களுடன் பரத்துவாசரிடம் கலை பயின்றவன். 'பரத்வாஜ குலோத் பூதாய' 'தபஸ்விநே'— இவன் தவம் நோற்ற போது இவனை சூழ்ந்து 'யோகாக்கினி' கொழுந்து விட்டது. அத்தவ பலனுல் 'கனல்' 'அழல்' என்ற பெயர்களுடன் கிரகமாக வானில் சுயம் பிரகாசனுக விளங்குகின்ருன்.

இவனது தோற்றம் பற்றிய மற்ருெரு செய்தியானது, அம்பிகை அருபியாக தபஸ் செய்யும் போது காவல் தெய்வமாக மிகுந்த சினத்தோடு காவல் காத்த வீரபத்திரர்தான் சினம் மாறி அங்காரகனுய் விளங்குகிருர் என்பது, 'மஹாவீராய', 'மஹாரௌத்யாய' 'வீரபத்ராய' என்ற நாமாவளிகள் இதனை காட்டுகின்றன.

'' வசன நற்கூற யத்தோடு வன்னவர்
சபையில் வார்த்தை
புஜபல பராக்கிரமங்கள் போர்தனில்
பெற்றியாண்மை,
நிஜமுடன வரவர்க்கு நீணிலந்தனி
லளிக்குங்
குசனில மகனுஞ் செவ்வாய்
குரைகழல் போற்றி போற்றி! ''

பூமி, தனம், வீரம், வெற்றி முதலியன விளைவிப்பவன் செவ்வாய் என்கிறது போற்றிமாலை. மற்றும் இவன் பசுக்களுக்கும், பயிர்களுக்கும் நன்மை செய்பவன்.

'மேஷவ்ருஸ்சிக ராஸிஸாய' மேஷ விருச்சிக ராசிகளுக்குரியவன்: மகர ராசியில் உச்சத்தை அடைபவன். ''ரக்தாம்பராய'', ''ரக்தவபுஷே,' சிவத்தமேனி உடையவன், 'மங்ளப்ரதாய, 'மங்களாய' மங்கள உருவுடையதால் மங்களன் எனப்படுகிருன். 'சந்தரப்ரிய' சந்திரன் மற்றும் குரு, சூரியன் ஆகியவர்களுக்கும் நண்பன். 'ஸௌர்ய யாம்ய ப்ரதேஸஸ்த்தாய' சூரியனை சுற்றி வருகின்றவன், 'மேஷ வாஹாய'-மேஷத்தை வாகனமாகக் கொண்டவன். 'ஸுப்ரஹ்மண்யாய' கந்தனின் அம்சமானவன். இவை நாமாவளி மூலம் குசன்பற்றிய விவரங்கள்.

சோதிட நூல் வழி இவனது தன்மையை ஆராயுங்கால் ஆண்கிரகமான இவன் பாபக்கிரகம். பூமிக்குரியவன். பலத்திற்கு அதிகாரியான இவன் மூளைக்குரியவன். சகோதரர் காரகன். சகோதரர்கள் பற்றிய விபரங்கள் ஜாதகத்தில் இவன் இருக்கும் இடம், தன்மை கொண்டு அறியப்படுகிறது. இவனது கிரக பூதம்-அக்கினி. உச்சம் மகரராசியில்; மூலத்திரிகோணம் மேஷத்தில் முதல் பாகை. இரவிலும், கிருஷ்ணபக்ஷத்திலும் பல முடையவன். ஒவ்வொரு ராசியிலும் ஒன்றரை மாதம் இருப்பவன். இவனுக்கு தசை ஏழு வருடங்கள். செவ்வாயின் பலனும் கேதுயின் பயனும் ஒத்திருக்கும் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

'' அஞ்சாம லெதிர் பேசி
நிற்குமனையாள் வாக்கி
லங்காரகச் சென்மாம் ''

என்று, வாக்கில் அங்காரகன் இருக்கும் பலனை குமரேச சதகம் காட்டுகிறது.

சூரியனுக்கு இடதுபுறம் நிற்கும் நிலையில் இருக்கும் இவனது நிறம்—நல்லசிவப்புநிறம்; ஆடை-செவ்வண்ண ஆடை. கரங்கள் நான்கு. வலது கரங்களில் அபயமும், சக்தியாயுதமும் தரித்திருப்பான். இடது கரங்களில் கதையும், சூலமும் திகழும். புஷ்பம்-செண்பகம். சுவை-துவர்ப்பு. உலோகம்-செம்பு. மணி-பவளம். வாரம்-மங்களவாரம். தானியம்-துவரை. திசை-தெற்கு. ஆசனம்-திரிகோண வடிவம். பாஷை-மந்திரம். குணம்-

---

திரு. எஸ். உமாமகேஸ்வரி B.Sc.,
தஞ்சாவூர்.

---

குரூரம். அதிகமாக புசிக்கும் தன்மை உடையவன். அதிதேவதை-உருத்திரன், நோய்-பித்தம். சமித்து-கருங்காலி. ஜாதி-க்ஷத்திரியன். இவனுக்கு உள்ள நிலபரப்பு கிருஷ்ணுநதி முதல் இலங்கை வரையில். இவனுக்கு என்று தனி க்ஷேத்திரம் இல்லை. பழநியே இவனுக்குரிய க்ஷேத்திரம். மூர்த்தி ஸ்ரீ தண்டாயுதபாணி. காயத்ரீமந்திரம்.

# அபிராமி அருட்பா

திருமதி. ராஜலக்ஷ்மி பரமேச்வரன், பங்களூர்.

(இறையன்பு விளைவிக்கும் எழிலார்ந்த அற்புதங்கள் பலப் பல. தன்பால் அன்பு பூண்டு பக்தி செய்வோருக்கு ஆண்டவன் எப்போது, எங்ஙனம் அருளுகின்றான் என்பது நமக்கு இன்னமும் விளங்காத ஒரு புதிராகும். சற்றும் எதிர்பாராத வகையில் அவ்வாறு இறையருளுக்குப் பாத்திரமாகும் அரியதொரு பேற்றினைப் பெற்றவர் பங்களூரில் வசிக்கும் திருமதி. ராஜலக்ஷ்மி பரமேச்வரன். உயர்ந்ததோர் உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெற்ற தமது கணவருடன் க்ஷேத்ராடனம் செய்து வந்த ராஜலக்ஷ்மி அம்மையார் 'அபிராமி அந்தாதி'ப்புகழ் திருக்கடவூர் அம்பிகையின் சந்நிதிக்குச் சென்ற சமயம் திரை போடப்பட்டிருந்தது. தேவியின் தரிசனத்திற்காகக் காத்திருந்த அம்மையாருக்கு அன்னையின் அருள் தானாகக் கிடைத்தது. அன்னையின் புகழ்கூறும் அருட்பாக்கள் அம்மையாரிடமிருந்து இசையுடன் பெருக்கெடுத்துப் பக்தர்களைக் குளிர்வித்தன. அமுதத் தமிழில் அபிராமி அன்னைக்கு அம்மையார் சூட்டிய பாமலர்களுள் சிலவற்றையேனும் நாமும் பாடி நம்மையே புனிதப்படுத்திக் கொள்ளலாமே.)

### ராகம் - பூபாளம்

அருணன் உதித்தனன் அம்புஜம் மலர்ந்தது
இன்புறவே அன்பர் நின் துதி பாடினர்
இருளும் மறைந்தது இதயம் மலர்ந்தது
அன்னையே அபிராமி துயிலெழுவாய் தாயே

குயிலும் கூவுது மயிலும் ஆடுது
ஆவும் அழைக்குது காவும் தழைக்குது
உன்னை அலங்கரிக்க சகல மணமுள்ள
மலர்களெல்லாம் மலர்ந்தன

வேத பாராயணமும் தேவசங்கீத பூபாள
ராகமும் மேளதாளத்துடனே முழங்குதுதாயே
பக்த கோடிகளெல்லாம் பரவசமாக உன் தரிசனம்
காணத் துதிக்கின்றனர் தாயே அன்னை அபிராமி
ஈசருடன் பள்ளி எழுந்தருள்வாயே

### ராகம் - செஞ்சுருட்டி

கணநேரமும் உன்னை மறவேன் தாயே—ஒரு
கணநேரமும் உன்னை மறவேன் தாயே (கண)

நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும் உன்னையே
நினைத்து உள்ளம் பூரிக்கின்றேன் தாயே (கண)

என் குறையை நீ இன்னமும் அறியாயோ
திருக்கடவூர் செல்வியே அபிராமி (கண)

ஞான சம்பந்தருக்கு அமுதூட்டிய தாயே
திருமுலைப்பால் கொண்டு ஜெகமெல்லாம் காத்த தாயே (கண)

ஏழை நான்படும்துயரம் என்று தீர்ப்பாய் தாயே
என் கனவிலாவது வந்து தரிசனம் தருவாயே (கண)

★

"வீரத்வ ஜாய வித்மஹே
விக்நஹஸ்தாய தீமஹி
தந்நோ பௌம ப்ரசோதயாத்"

இவனது வாரத்தில் இவனுக்குரிய கோலத்தை இட்டு இவனுக்குரிய ஸ்துதியையும், ஸௌந்தர்யலஹரி ஸ்லோகத்தையும் கூறி தியானித்தால் சத்துரு ஜயம் கிடைக்கும்.

செவ்வாய்க்குரிய ப்ரீதி அங்காரக சாந்தி, செண்பகம் அல்லது சிவப்பு நிற புஷ்பங்களால் அர்ச்சனை, நமஸ்காரம், கருங்காலி சமித்தினால் ஓமம். துவரம் பருப்பு தானம். செம்புபாத்திரம் தானம், கந்தசுவாமிக்கு விசேஷ அபிஷேக ஆராதனை, ஸ்கந்த சகஸ்ர நாம பாராயணம்.

"ஆரலும் சோமவாரம் அணிகிய
சஷ்டி தன்னில்
பேருலி பரமனுக்கும் பெருமைசேர்
கந்தனுக்கும்
சீர் பெற வபிஷேகித்து சிரப்புரும்
யோகர்க்கன்பாய்
ஆரிரு பேருக்கீந்தால் வரும்பிணி
யகன்று போமே."

[ஆரல்-செவ்வாய், சோமவாரம்-திங்கட்கிழமை]

'ஸர்வ கஷ்ட நிவார காய'-சகல துன்பங்களையும் நீக்குபவனும், குறிப்பாக தீப்புண், காயம், ரணம் போன்ற துன்பங்களை நீக்குபவனுமான செவ்வாய் கந்தனின் அம்சமானவன். அவனைப் போன்றே சூலமும், சக்தியாயுதமும் தரித்திருப்பவன் ஆகவே செவ்வாய்கிழமை சஷ்டி சிறப்பாகவும் இவனுக்கும் உரியதாக கருதப்படுதலால் பிணியகல செவ்வாய் அல்லது திங்கள் அன்று சஷ்டி வரின் முறையே பரமன் அல்லது கந்தனுக்கு அபிஷேக ஆராதனையும், அன்னதானமும் செய்யவேண்டும் என்கிறது நாடி சோதிட பாடல்.

★

# அனுமன் கதை



## 20. உயிரைத் தந்தான்!

**இன்று வீகலா தெவரும் எம்முடன்**
**நின்று வாழுமா நெடிது நல்கினாய்**
**ஒன்றும் இன்னல்நோய் உறுகி லாதுநீ**
**என்றும் வாழ்தியால் இனிதென்**
**ஏவலால்.**

*(114-மருத்துமலைப்படலம், யுத்த காண்டம்.)*

பிரம்மாத்திரத்தால் அனுமன் தரை மேல் மயங்கி விழுந்ததைப் போலவே, சுக்ரீவன், அங்கதன், சாம்பவான், நீலன், இடபன், பனசன், நளன், மயிந்தன், துமிந்தன், கவயன், கேசரி, சதவலி, சுசேடணன், வினதன், கந்த மாதனன், இடும்பன், ததிமுகன் முதலான வானரத் தலைவர்களும், மற்றைய வானரங்கள் யாவும் பிரம்மாத்திரம் பலபடியாகத் தாக்கியதால் பூமி மேற் சாய்ந்து மாய்ந்தார்கள். இந்திர சித்து வெற்றிச் சங்கம் முழங்க இராவணனைச் சென்றடைந்தான். வானர வீரர்கள் பலரும் இலக்குவன் முதலானோரும் பிரம்மாத்திரத்தால் மாய்ந்த செய்தி கேட்டு இராவணன் பெரிதும் மகிழ்ந்தான்.

அஸ்திர பூசை செய்வதற்காகச் சென்றிருந்த இராமபிரான் பூசை முடிந்ததும் போர்க்களம் குறுகினார். வானரங்கள் மடிந்து கிடத்தலைக் கண்டார். மாண்டு கிடந்த சுக்ரீவனைக் கண்டு, மனம் உருகிக் கண்ணீர் பெருக்கி நின்றார். பக்கத்தே அனுமன் மாண்டு கிடத்தலைக் கண்டார். அனுமனைக் கண்டதும் ஆருத்துயரடைந்தார். கண்ணீர் விட்டுக் கதறினார். வாய்விட்டுப் புலம்பினார். திருமாலின் அவதாரமாகிய இராமபிரான் அனுமனுக்காக அழுது புலம்பினார் எனின், அனுமனைக் காட்டிலும் புண்ணியம் செய்தவர் பூமியிலுண்டோ?

தம்மை ஆண்டவரது கண்களில் நீர் மல்குமாறு இறக்க வல்லாராயின், அத்தகைய சாவினை இரந்தாவது (யாசித்தாவது) பெறுதல் சிறப்புடையது என்கிறார் திருவள்ளுவர்.

**புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்கா**
**டிரந்துகோள் தக்க துடைத்து.**

*(10, படைச் செருக்கு—திருக்குறள்.)*

இத்தகைய சிறப்புமிக்க சாவினை அனுமன் பெற்றான்! இனி, இராமபிரான் மனம் கரைந்து புலம்பும் வார்த்தைகளைக் காண்போம்:

''புகழ்மிக்க அனுமானே! நீ எமக்காகக் கடத்தற்கரிய கடலைக் கடந்தாய்! அரக்கரைக் கருவுடன் கலக்கினாய்! என் துயர் நீங்குமாறு சீதையிருக்கும் செய்தியைச் செப்பினாய்! இவ்வாறெல்லாம் எனக்கு உதவிய நீ மாண்டு மண்மேல் கிடப்பதோ? அரக்கன் விட்ட அம்புகள் உன் உடலையுமா துளைத்துச் சென்றன? நீ சாகா வரம் பெற்றவனாயிற்றே! தேவர்கள் உனக்குக் கொடுத்த சிரஞ்சீவித்துவமும் பயனற்றுப் போய்விட்டனவோ? என்னாலன்றோ உனக்கு இக்கதி நேர்ந்தது! என் போன்ற பாவியரும் உலகில் உண்டோ?

இழந்த அரசாட்சியினை விரும்பியன்றோ உன்னை நான் இழந்தேன்! என் தந்தை இறந்ததும், தந்தை முறையான சடாயு இறந்ததும் என்னாலன்றோ! இத்தனை பேரும் என் பொருட்டன்றோ உயிர் துறந்தனர். சுக்ரீவனுக்கு அரசாட்சியைக் கொடுத்தது போல் கொடுத்து, அவன் உயிரையேயன்றோ இன்று இழக்கச் செய்து விட்டேன்! என்னாலன்றோ உங்களுக்கு இத்தகைய துன்பமெல்லாம் நேர்ந்தது! பூமிக்குப் பாரமாக நான் ஏன் பிறந்தேன்! அனுமனே! அன்பிற்குரியோனே! உன்னை நான் மீண்டும் காண்பேனோ?''

இவ்வாறு கல்லும் கரைந்துருகுமாறு இராமபிரான் அனுமன் உடலைக் கண்டு புலம்பினார். பின் தன் தம்பி இலக்குவனைக் கண்டு உயிர் சோர்ந்தார். இச்செய்தி இராவணனுக்கு எட்டியது. சீதைக்குப் போர்க்களத்தைக் காட்டுமாறு இராவணன் தன் வீரர்களுக்குக் கட்டளை பிறப்பித்தான். களத்தில் மூர்ச்சையுற்றிருந்த இராமபிரான் முதலியோரைக் கண்ட சீதை உயிர்விடத் துணிந்தாள். திரிசடை சீதையைத் தடுத்து ஆறுதல் கூறினாள்.

இவ்வேளையில் விபீடணன் போர்க்களம் சார்ந்தான். அங்கிருந்தோர் நிலைமைகளை அறிந்தான். கொள்ளிக் கட்டை ஒன்றைத் தன் கையிலேந்தி ''எவரேனும் இறவாமல் உள்ளனரா?'' என விபீடணன் அங்கே தேடிப் பார்த்தான். அனைவரும் மடிந்து போயிருக்க, அனுமன் மட்டும் உணர்

# திருமலையிலும் திருப்பதியிலும் உணவு வசதிகள்

நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து யாத்திரை மேற்கொள்ளும் யாத்திரிகர்களின் அடிப்படை பிரச்னைகள், அவர்கள் போகும் இடங்களில் அமையும் தங்குவதற்கான இருப்பிடமும், உண்ணும் உணவும்தான். இதை மனதிற்கொண்டுதான் தி.தி. தேவஸ்தானம் திருமலையிலும் திருப்பதியிலும் யாத்திரிகர்கள் தங்குவதற்காக இலவச சத்திரங்கள் பலவற்றையும், வசதியான காட்டேஜுகள் பலவற்றையும் கட்டியுள்ளது. இவை எவ்வகையில் உதவியாக அமைந்துள்ளன என்பது திருமலைக்கு வருகை புரியும் ஒவ்வொரு யாத்திரிகருக்கும் நன்கு தெரியும். அடுத்து எழுவது உணவுப் பிரச்னை. திருமலையில் தனியார் உணவு விடுதிகள் பல இருந்தாலும், சுகாதாரமான முறையில் செய்யப்பட்டு, நியாயமான விலையில் வழங்கப்படும் உணவு வகைகள் தேவஸ்தானத்தாரின் உணவு விடுதிகளிலும், மற்றும் தேவஸ்தானத்தாரால் குத்தகைக்கு விடப்பட்டுள்ள தனியார் நடத்தும் சில சிறந்த உணவு விடுதிகளிலும் மட்டுமே கிடைக்கும். இவற்றைப் பற்றிய சில அடிப்படை விவரங்கள், யாத்திரிகர்களின் நன்மையின் பொருட்டு கீழே வழங்கப்பட்டுள்ளன.

### அன்னபூர்ணா ஹோட்டல்

*(சங்கு மிட்டா காட்டேஜ் அருகில்)*

சிற்றுண்டி நேரம்: 5 A.M. to 10 P.M.
சாப்பாடு நேரம் : 9 A.M. to 3 P.M.
6 P.M. to 10 P.M.

அளவு சாப்பாடு ரூ. 1-75
முழுசாப்பாடு ரூ. 3-00

*(சனிக்கிழமைகளில் பாயசம் வழங்கப்படும்)*

இவற்றைத்தவிர கார வகைகளும், குளிர்பானங்களும், சூடான பானங்களும் இங்குக் கிடைக்கப் பெறலாம்.

### உட்லேண்ட்ஸ் ஹோட்டல்

*(தி. தி. தேவஸ்தான விருந்தினர் விடுதிக்கு அருகில்)*

சிற்றுண்டி நேரம் : 6 A.M. to 10-00P.M.
சாப்பாடு நேரம் : 11 A.M. to 2-30 P.M.
6 PM. to 10-00 P.M.

தமிழ்நாடு சாப்பாடு ரூ. 4-00
வடஇந்தியச் சாப்பாடு ரூ. 6-00
அளவு சாப்பாடு ரூ. 1-75

இவற்றைத் தவிர இனிப்பு வகைகளும், குளிர் பானங்களும் நியாயமான விலையில் இங்குக் கிடைக்கும்.

### காஃபி போர்டு

*(கல்யாண கட்டாவிற்கு அருகில்)*

சிற்றுண்டி நேரம் : 5 A.M. to 10 P.M.
மினி காஃபி (4 அவுன்ஸ்) 40 காசு
ஒரு கோப்பை காஃபி (6 அவுன்ஸ்) 60 காசு

இவற்றைத் தவிர சிற்றுண்டி மற்றும் குளிர் பானங்கள் போன்ற வசதிகளும் உள்ளன.

இந்நிறுவனத்தாரின் மற்றொரு கிளை பி. பி. ஷெட்டிற்கு (க்யூ ஷெட்டிற்கு) அருகில் உள்ளது.

வேலை நேரம் : 5 A.M. to 10 P.M.

தயிர்சாதம் (ஒரு பாக்கெட்) ரூ. 0-60
எலுமிச்சை சாதம் ,, ரூ. 0-60

குளிர்பானங்களும் கிடைக்கும்.

### டீ போர்டு

*(ஆழ்வார் ஏரிக்கு அருகில்)*

வேலை நேரம் : 6 A.M. to 11 A.M.
2 P.M. to 6 P.M.

டீ 25 காசு.
ஆம்ப்ரோ க்ளுகோ பிஸ்கட்டுகள்
(ஒரு பாக்கெட்) 75 காசு.

### தி. தி. தேவஸ்தான விருந்தினர் விடுதி

சிற்றுண்டி நேரம் : 6 A.M. to 9 A.M.
3 P.M. to 6 P.M.
சாப்பாடு நேரம் : 11 A.M. to 2 P.M.
7 P.M. to 9 P.M.

முழு சாப்பாடு ரூ. 3-00

இவைத்தவிர கார வகைகளும், இனிப்பு வகைகளும் குறைந்த விலையில் கிடைக்கும்.

*(சாப்பாட்டுக்கும், சிற்றுண்டிக்கும் 3 மணி நேரத்திற்கு முன்பாகவே தங்கள் தேவைக்கு தகவல் தருதல் அவசியம்)*

### திருப்பதியில் தி. தி. தேவஸ்தான உணவு விடுதி

*(இரண்டாவது புதிய சத்திரத்திற்கு அருகில்)*

சிற்றுண்டி நேரம் : 5 A.M. to 9-30 A.M.
2-30 P.M. to 6 P.M.
சாப்பாடு நேரம் : 10-30 A.M. to 2 P.M.
6-30 P.M. to 9 P.M.

அளவு சாப்பாடு ரூ. 1-50
தயிர் (ஒரு கப்) ரூ. 0-40

இதைத் தவிர சிற்றுண்டி வகைகள், ஆம்ப்ரோ க்ளுகோ பிஸ்கட்டுகள், குளிர்பானங்கள் முதலிய உணவு வசதிகளும் உண்டு.

தி. தி. தேவஸ்தானத்தின் முதல் சத்திரத்தில் உள்ள, மற்றொரு தேவஸ்தான உணவு விடுதியிலும் சாப்பாட்டைத் தவிர மற்றைய சிற்றுண்டி வகைகள் குளிர் பானங்கள் போன்ற வசதிகள் காலை 5 மணி முதல் இரவு 9 மணி வரை யாத்திரிகர்களுக்குக் கிடைக்கும்.

வற்ற நிலையில் உயிரிழக்காமல் இருப்பதைக் கண்டான். கடல் கடந்த வீரனாகிய அனுமன் பிண மலைகளின் மேல் கிடந்தான். அனுமனைக் கண்டதும் விபீடணனின் கண்கள் நீரைச் சொரிந்தன. அனுமனின் உடலில் தைத்திருக்கும் அம்புகளை நோவாமல் ஒவ்வொன்றாக எடுத்தான். அம்புதைத்தலால் ஏற்பட்ட புண்களிலிருந்து ஒழுகும் குருதியை ஒருவாறு தடுத்து நிறுத்தினான். மேகத்தின் நீரைக் கொண்டு வந்து அனுமன் முகத்தில் தெளித்து அவன் களைப்பை மாற்றினான்.

முகத்தில் நீர்பட்ட அளவில் அனுமனுக்கு உயிர்ப்பு தோன்றியது. மெய்ம்மயிர்கள் சிலிர்த்தன. வியர்வை நீர் அரும்பியது. கண்கள் மலர்ந்தன. வாய், "ராம்! ராம்!" என வாழ்த்தியது. தன்மேல் பிரம்மாத்திரம் பட்ட போதும் சரி, உணர்விழந்த நிலையிலும் சரி, உணர்வு திரும்பிய நிலையிலும் சரி. இராமநாமத்தை உச்சரிப்பதையே தனது கடமையாகக் கொண்டிருந்தான் அனுமன். என்னே அனுமனின் இராம பக்தி! இதனாலன்றோ அனுமனைப் 'பக்த அனுமன்' என உலகம் புகழ்கிறது.

ஸ்ரீ சந்திரசேகர சுவாமி கோயிலின் முக கோபுரம்-ராமசமுத்திரம் ஆ பி. திரு. பி. நீரசாக்ஷிலு நாயுடு-திருப்பதி.



அனுமன் உயிர்த்தெழுதலைக் கண்ட விபீடணன் அழுகையும் உவகையும் அடைந்தான்; அன்பு மிகுதியால் அனுமனைத் தழுவிக் கொண்டான். உணர்வு திரும்பியதும் அனுமன் கேட்ட முதல் கேள்வி, "இராமபிரான் நலமாக உள்ளாரா?" என்பது தான்!

"இராமபிரான் நலமே!" என விபீடணன் கூறினான். தூய்மையும் வாய்மையும் மிக்க அனுமன் இது கேட்டு இராமபிரான் இருக்கும் திசை நோக்கித் தொழுதான். அடுத்துச் சாம்பவான் எவ்வாறு உள்ளான்? என்று கேட்டான். சாம்பவானைப் பற்றித் தனக்கு ஒன்றும் தெரியாது என்று விபீடணன் கூறினான். சாம்பவானுக்கு இறப்பென்பதே கிடையாது. எனவே, அவனைத்தேடிக் கண்டு பிடிக்க அனுமன் முடிவு செய்தான்.

மூப்புத் தன்மையாலும், அம்புகள் தைத்துள்ளமையாலும், நண்பர்களை யிழந்த துன்பத்தாலும் மயக்கங் கொண்ட மனத்தையுடையவனான சாம்பவான் தன்னை நாடி வருபவர்களைத் தன் அறிவால் உணர்ந்து கொண்டான். கண்ணீர் பெருகத் தன் அருகில் நிற்பவர்களை யாரென்று சாம்பவான் வினவினான்.

"அனுமன் வந்துள்ளேன். தங்களை வணங்குகிறேன்." என அனுமன் கூறினான். இனி அனைவரும் பிழைப்பது உறுதி என்று சாம்பவான் கருதினான். அனைவரையும் அனுமன் மூலமாகப் பிழைக்கச் செய்யமுடியும் என்பது சாம்பவானின் எண்ணம்.

"இராமபிரானின் தற்போதைய நிலை என்ன?" என்று சாம்பவான் வினவினான். துன்பக் கடலில் இராமபிரான் அழுந்தியுள்ளதாக அனுமன் கூறினான்.

"வீரம் மிக்க அனுமனே! இராம இலக்குவர் உடலால் இருவராயினும் உயிரால் ஒருவரேயாவர். எனவே, இராம இலக்குவரையும், மற்றையோரையும் பிழைக்கச் செய்ய வல்ல மருந்துமலையை நீ கொணர்தல் வேண்டும், மைந்தனே! மருந்துமலையைக் கொணரும் ஆற்றல் உனக்கு மட்டுமே உண்டு. அம்மருந்தால் எழுபது வெள்ளஞ் சேனைகளும், இராம இலக்குவரும், உலகம் மூன்றும், வேதங்கள் நான்கும், நல்ல தரும தேவதையும் வாழ்வு பெறுவர். ஆதலால் அனைவரையும் வாழ வைக்கச் சிறிதும் தாமதியாமல் நான் சொல்லும் வழியே விரைந்து போவாய்.

வலிமையுள்ளவனே! இங்கே காண்கின்ற கடலைக் கடந்து ஒன்பதாயிரம் யோசனை தூரம் சென்றால் இமய மலையை அடையலாம். அங்கிருந்து ஒன்பதாயிரம் யோசனை தூரம் சென்றால் ஏமகூடமலைவரும். அதையுங் கடந்து ஒன்பதாயிரம் யோசனை சென்றால் நிடதமலை காணப்படும். அதையும் கடந்து சென்றால் மேருமலையைக் காணலாம். மேருவையுங் கடந்து சென்றால் நீலகிரியைக் காணலாம். நீலகிரியைக் கடந்து நாலாயிரம் யோசனை தூரம் சென்றால் மருந்துகள் தங்கியிருக்கும் கரிய மலையினைக் காண்பாய். அம்மலையைக் கண்டால் நம் துன்பங்கள் நீங்கும்.

அம்மலையிலுள்ள மருந்து மாண்டவரை மீளச் செய்யும், உடல் வெவ்வேறாகப் பிளந்து விட்டாலும் அதை மீண்டும் ஒன்றாகச் செய்யும், உடலின் வடிவமே மாறிவிட்டாலும் மீண்டும் பழைய வடிவையே தரும் மருந்தும் அங்கே உண்டு. வீரனே! நீ அங்கே போய் அம்மருந்துகளைக் கொணர்வாயாக!"

சாம்பவானின் இவ்வுரைகளை அனுமன் கேட்டான். மருந்துகளின் பயனை

TIRUMALA TIRUPATI DEVASTHANAMS

# ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயில், திருப்பதி

## தினசரி நிகழ்ச்சி நிரல்

| | | | | |
|---|---|---|---|---|
| சுப்ரபாதம் | 5-00 A.M. | முதல் | 5-30 A.M. | வரை |
| விஸ்வரூப சர்வ தரிசனம் | 5-30 A.M. | ,, | 7-00 A.M. | ,, |
| சுத்தி | 7-00 A.M. | ,, | 7-30 A.M. | ,, |
| தோமால சேவை | 7-30 A.M. | ,, | 8-00 A.M. | ,, |
| அர்ச்சனை (ஆர்ஜிதம்) | 8-00 A.M. | ,, | 8-30 A.M. | ,, |
| முதல்மணி, சாத்துமுறை | 8-30 A.M. | ,, | 9-00 A.M. | ,, |
| சர்வ தரிசனம் | 9-00 A.M. | ,, | 12-30 P.M. | ,, |
| இரண்டாவது மணி | 12-30 P.M. | ,, | 1-00 P.M. | ,, |
| சர்வ தரிசனம் | 1-00 P.M. | ,, | 6-00 P.M. | ,, |
| தோமாலசேவை, இரவுமணி | 6-00 P.M. | ,, | 7-00 P.M. | ,, |
| சர்வ தரிசனம் | 7-00 P.M. | ,, | 8-45 P.M. | ,, |
| ஏகாந்தசேவை | 9-00 P.M. | | | |

ஒவ்வொரு பௌர்ணமி நாளன்றும் பூலங்கி சேவை நடைபெறும்.

### கட்டணம் செலுத்தி நடத்தப்படும் சேவைகள்

| | |
|---|---|
| தோமால சேவை (நபர் ஒருவருக்கு) | ரூ. 4—00 |
| அர்ச்சனை | ரூ. 3—00 |
| ஹாரத்தி | ரூ. 1—00 |

### ஸ்ரீ கோவிந்தராஜர் கோயில் வாகனங்கள்

| | |
|---|---|
| கருட வாகனம் | ரூ. 32—00 |
| சந்திரப்பிரபை வாகனம் | ரூ. 32—00 |
| யானை வாகனம | ரூ. 32—00 |
| குதிரை வாகனம் | ரூ. 32—00 |
| சிம்ஹ வாகனம் | ரூ. 32—00 |
| ஹனும வாகனம் | ரூ. 32—00 |
| சிறிய சேஷ வாகனம் | ரூ. 32—00 |
| பெரிய சேஷ வாகனம் | ரூ. 62—00 |
| சர்வ பூபால வாகனம் | ரூ. 62—00 |
| சூர்யப் பிரபை வாகனம் | ரூ. 62—00 |

யும் செல்லும் வழியையும் கூறிய சாம்பவான் மருந்தைக்கொண்டு வருவதில் உள்ள இடையூறுகளையும் கூறினன். அவ்விடையூறுகளை அனுமனால் விலக்க முடியும் என்றும் கூறினன்.

வேதம் போன்றவனை அனுமன் சாம்பவான் கூறியவற்றையெல்லாம் கவனமாகக் கேட்டுக் கொண்டான். இராமபிரான் முதலான அனைவரின் துயரையும் நீக்குதலே தன் தலையாய பணி என உணர்ந்தான். மருந்தினைக் கொணரச் சம்மதித்தான். உடனே, ஆகாயத்தை விழுங்கினற் போன்ற பேருருவங்கொண்டான். இலங்கையை விட்டு விரைந்து சென்றான். அவன் சென்ற வேகத்தில் மழை மேகங்கள் கிழிந்தன. நீண்ட கடல் இரண்டாகப் பிளந்தது. கிழக்கிலும் மேற்கிலும் விண் மீன்கள் உதிர்ந்தன. மலைகளும் மரங்களும் கிளர்ந்தெழுந்து உடனே சென்றன. தேவர்களின் விமானங்கள் கடலிலே விழுந்தன. கடல் நீரும் வற்றியது. மேகங்களும் கரிந்தன. பெரிய காடுகளும் வெந்தொழிந்தன.

அனுமன்மேகமண்டலத்தைக்கடந்து சூரிய மண்டலத்தை அடைந்தான். அப்பால், நட்சத்திர மண்டலத்தைக் கடந்து, சுவர்க்க லோகத்தை அடைந்தான். அனுமனது வேகத்தைக் கண்டு வானுலகோர் பல வகையாக வியந்து கூறினர். அனுமன் சுவர்க்க லோகத்தைக் கடந்து பிரம்மலோகத்தைச் சமீபத்தவனுகிப் பெரும் விம்மலுற்றுப் பேரொலி எழுப்பினன். இவ்வொலி கேட்டுத்திக்குப் பாலகர்கள் திகில் அடைந்தனர். அண்ட கோளங்கள் அதிர்ந்தன. தேவர், முனிவர், சித்தர் முதலியோர் மகிழ்ச்சி கொண்டு அனுமன்மேல் மணிகளையும் மலர்களையும் தூவினர்.

அனுமன் இமய மலையை அடைந்தான். அங்கிருந்த தேவரும் முனிவரும் அன்புடன் அனுமனை வாழ்த்தினர். பின் கைலையைக் கண்டு அனுமன் மகிழ்ந்தான். கூப்பிய கையுடன் செல்லும் அனுமனின் வரலாற்றை

யும், அவன் செல்லும் காரணத்தையும் சிவபிரான் உமையம்மைக்கு விளக்கமாக எடுத்துக் கூறினார்.

பின்னர், அனுமன் ஏம கூடத்தைக் கடந்து மேருமலையின்மேல் இருந்த தெய்வத்தன்மை பொருந்திய நாவன் மரத்தைக் கண்டு மகிழ்ந்தான். அம் மேருமலைமேல் வீற்றிருந்த நான்முகன், திருமால், உருத்திரன், இந்திரன், திக்குப் பாலகர் முதலியோரைக்கண்டு வணங்கினான். பின் நீலமலையைக் கடந்து சென்று சாம்பவான் கூறிய மருந்து மலையைக் கண்டான். அம் மலைமேல் அனுமன் பாய்ந்தான். அதனால் அம்மலை தாழ்ந்தது. அப்போது அம்மலையைக் காக்கும் தேவதைகள் அனுமனின் வரலாற்றையும் அவன் வந்துள்ள நோக்கத்தையும் கேட்டறிந்தன. பின் அத்தெய்வங்கள், 'ஐயனே! இங்குள்ள மருந்தினை எடுத்துக் கொண்டு போய், பின் அவற்றை எம்மிடமே சேர்த்து விடுக!'' எனக்கூறி அத்தெய்வங்கள் மறைந்தன.

மருந்துகள் ஒவ்வொன்றையும் ஆராய்ந்து கொண்டிருந்தால் கால தாமதமாகும் எனக்கருதிய அனுமன், அம்மருந்து மலையை வேருடனே பெயர்த்துக் கையில் ஏந்தி வான் வழியே விரைந்து செல்லலானான். ஆயிரம் யோசனை தூரம் பரப்புள்ள தான அச்சஞ்சீவி மலையை நொடிப் பொழுதில் பெயர்த்தெடுத்த அனுமனின் ஆற்றலை வியக்காதார் யாருமே இலர்.

இதற்கிடையில், இலங்கையின் போர்க்களத்தே இராமபிரான் கண் விழித்துப் பார்த்தார். அருகே சாம்பவான், விபீடணன் நிற்றலைக் கண்டார். அனைவரும் மாண்டு கிடக்கையில் தானும் மடிவதே செய்யத் தக்கது என்று இராமபிரான் அவர்களிடம் கூறினார். இதைக் கேட்ட சாம்பவான் இராமபிரானைத் துதித்து, அனுமன் சஞ்சீவி மலையைக் கொண்டு வரச் சென்றிருக்கும் செய்தியைக் கூறினான்.

இவ்வாறு கூறிக்கொண்டிருக்கும் போதே வடதிசையில் பேரொலி ஒன்று எழுந்தது. இராமன், விபீடணன், சாம்பவான் ஆகியோர் ஒலியெழுந்த திசையை உற்று நோக்கினர்.

பேராரவாரத்துடன் சஞ்சீவிமலையைக் கொண்டு வரும் அனுமனைக் கொண்டு மூவரும் வியந்து நின்றனர். 'அனுமன் வந்தான்!' என்று சொல்லுதற்கு முன்பே அனுமனின் பாதங்கள் நிலத்தில் ஊன்றி நின்றன.

உடனே, வாயு பகவான் சஞ்சீவி மலையில் உள்ள மருந்தின் நன்மைகளையெல்லாம் அள்ளிக்கொண்டு போய்ப் போர்க்களமெங்கும் வீசினான். உடனே, சுக்ரீவன் முதலான வானரத் தலைவர்களும், மற்றைய வானர வீரர்களும் உயிர்ப் பெற்றெழுந்தனர். போர்க்களத்தில் இறந்துவிட்ட அரக்க வீரர்களின் உடல்களையெல்லாம் இராவணன் யார் கண்ணிலும் படாமல் கடலில் எறியச் சொல்லிவிட்டதால் அரக்கர்கள் மட்டும் பிழைக்க முடியவில்லை.

இராம இலக்குவர் அனைவர்க்கும் அனுமன் வாழ்வு தந்ததைக் கண்டு அரம்பையர் ஆனந்தத்தால் ஆடிப் பாடினர். வேதங்கள் முழங்கின. வேதியரின் மனமும், தேவர்களின் மனமும் கடலைப் போலக் குளிர்ந்து ஆரவாரஞ் செய்தன. யாவரும் உய்ந்தபின், பிரம்மாத்திரம் இராமபிரானை வலமாக வந்து தன்னிருப்பிடம் சேர்ந்தது.

அப்போது, தாய் போலும் அன்புடைய அனுமனை, நீரொழுகும் கண்களுடன் நின்றிருந்த இராமபிரான் மகிழ்ச்சியினால் தழுவிக் கொண்டார். திருமகட்கே உரிய மார்பை அனுமன் பெற்றான் எனின், அவன் பெருமையை என்னென்பது? தன்னைத் தழுவி நின்ற இராமபிரான் திருவடிகளை அனுமன் வணங்கினான்.

அனுமனை நோக்கி இராமபிரான் மன முருகிக் கூறலானார்:

''நன்னெறியில் ஒழுகு பவனே! என் பிரிவால் மாண்டுபோன என் தந்தையாகிய தசரத மன்னனுக்கு நாங்கள் மக்களாய்ப் பிறந்தோம். பின்பு, பிரம்மாத்திரத்தால் மாண்டு போனோம். அவ்வாறு மாண்டுபோன

ஸ்ரீபத்மாவதி தாயாரின் பஞ்சலோக விக்ரகம். திரு. ராகவன்-திருப்பதி.



# தி. தி. தேவஸ்தான தமிழ் சமய வெளியீடுகள்

| | ரூ. | பை |
|---|---|---|
| அஷ்டோத்ர சகஸ்ரநாம அர்ச்சனை ... | 1 | 00 |
| பாலசரிதம் (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சார்யா) ... | 0 | 75 |
| பால பாகவதம் (செவ்வைச் சூடுவார்) முதல் பாகம் ... | 4 | 00 |
| ,, ,, இரண்டாம் பாகம் ... | 4 | 00 |
| தசரூபகம் (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சார்யா) ... | 3 | 50 |
| குருபரம்பரை (திரு.-கே. பாலசுந்தர நாயக்கர்) ... | 3 | 00 |
| திருமலை வழிகாட்டி ... | 0 | 25 |
| ஸ்ரீ வேங்கடேஸ்வரர் மகாத்மியம் (தலபுராணம்) ... | 2 | 00 |
| ஸித்தாந்த த்ரய சங்க்ரஹம் (திரு. ஓ. வி. கபிஸ்தலம் தேசிகாச்சார்யா) ... | 2 | 50 |
| ஸ்ரீராமஜெயத் திருப்புகழ் பகுதி I, பகுதி II. (Each) (திரு. கே. பாலசுந்தர நாயக்கர்) ... | 3 | 00 |
| சர்வ தேவதா பூஜா விதானம் — தி. தி. தே — ... | 0 | 70 |
| ஸுப்ரபாதம் (பொருளுடன்) ,, ... | 0 | 50 |
| ஸுப்ரபாதம் ,, ... | 0 | 12 |
| செம்பொருள் (எஸ். கிருஷ்ணவேணி அம்மையார்) ... | 1 | 50 |
| ஸ்ரீநிவாச கல்யாணம் (வண்ணப்படங்களுடன்) ... | 11 | 50 |
| திருக்குறள் (பொருட்பால்) திரு.டி.பி. பழனியப்பபிள்ளை ... | 7 | 50 |
| ,, (காமத்துப்பால்) (தொகுத்தவர்) ... | 4 | 00 |
| திருவாய்மொழி (விளக்கவுரையுடன்) பாகம் 1 ... | 7 | 50 |
| (திரு. டி. பி. பழனியப்ப பிள்ளை) பாகம் 2 ... | 10 | 50 |
| யாப்பொளி (திரு. ஆர். ஸ்ரீநிவாச ராகவாச்சார்யா) ... | 3 | 50 |
| ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி ஸுப்ரபாதம் (திரு. எம். வி. ராமநாத கனபாடிகள் ... | 0 | 20 |
| நித்யாநுஸந்தானம் — தி. தி. தே — ... | 3 | 75 |
| ஏழுமலை யாத்திரை (திரு. டி. கே. நாராயணன்) ... | 4 | 00 |
| சித்திர ஸுப்ரபாதம் (வண்ணப்படங்களுடன்) தி.தி.தே - ... | 8 | 00 |

## தி. தி. தேவஸ்தான வெளியீடுகளுக்கான விற்பனை சலுகை விவரங்கள்

தி. தி. தேவஸ்தான கல்வெட்டு அறிக்கைகள், தி. தி. தேவஸ்தான கல்வெட்டுத் தொகுதி 1 மற்றும் தொகுதி 5 ஆக மூன்று நூல்களுக்கு, செட்டாக வாங்குவோர்க்கு, 12½% தள்ளுபடி வழங்கப்படும்.

'ஸ்ரீ அன்னமாச்சார்யா சங்கீர்த்தனமுலு' மற்றும் 'தாள்ளபாக்கா பணிகள்' ஆகிய 6 தொகுதிகளை (தெலுங்கு) ஒருமித்து வாங்கினால் 12½% தள்ளுபடி வழங்கப்படும்.

ரூ. 100 அல்லது அதற்கு மேற்பட்டு விளங்கும் விற்பனைக்கு 12½%, ரூ. 500/- லிருந்து ரூ. 1000/- வரை விளங்கும் விற்பனைக்கு 20%, ரூ. 1000/-க்கு மேல் இருக்கும் விற்பனைக்கு 30% என்றவாறு கமிஷன் வழங்கப்படும். ரூ. 100/-க்கு மேற்பட்டு சரக்காணைகள் விளங்கினால், அவற்றிற்கான தபால் செலவினை தி. தி. தேஸ்வதானம் ஏற்கும்.

நாங்கள் மீண்டும் உன்னால் பிறந்தோம். எனவே, நீ எங்களுக்குத் தாயும் தந்தையுமாகிறாய். நீ எங்களுக்கு உயிரைத் தந்ததன் மூலம் எங்களுக்கு நேரவிருந்த பழிகளையும் போக்கினாய். பகைவர்களாகிய அரக்கர்களை அழிக்கும் வாய்ப்பினையும் எங்களுக்குக் கொடுத்தாய்! எம்மைக் குலத்தோடும் காத்தாய்! நான் மறைகளின் நன்னெறிகளையும் நிலைபெறச் செய்தாய்! யுக முடிவிலும் உயிரோடிருக்க வல்ல நீ உற்ற சமயத்தில் எங்களைக் காப்பாற்றினாய்! அவ்வாறு நீ உதவவில்லையென்றால் நாங்கள் என்ன செய்ய முடியும்? எமக்குற்றவர்கள் பிரம்மாத்திரத்தால் மாண்டு போகாமல் எம்மோடு சேர்ந்து இன்னும் பல காலம் வாழும் பேற்றினை அருளினாய்! இப்பேருதவி புரிந்த நீ நோயின்றி இனிதே என்னாணையால் எந்நாளும் வாழ்வாயாக!''

இராமபிரான் வாழ்த்தினை அனுமன் பெற்றான். ''அம்மையாய் அத்தனாய அப்பனே!'' எனச் சீதா பிராட்டியார் முன்பு அனுமனை அழைத்ததன் மூலம் அனுமனைத் தன் தாய் தந்தையராகவே கருதினார். ''நின்னில் தோன்றினேம்!'' எனக் கூறியதன் மூலம் இராமபிரானும் அனுமனை அம்மையப்பனாகவே காண்கின்றார். இப்பாக்கியம் அனுமனுக்கன்றி யாருக்குக் கிடைக்கும்?

இராமபிரான் வாழ்த்தியதைப் போலவே, மற்றையோரும் தாங்கள் உயிர் பெற்றமைக்காக அனுமனை வாழ்த்தினார்கள். அன்புடன் தொழுதார்கள். நிகழ்ந்த செயல்கள் அனைத்தையும் அனுமன் அவர்களுக்கு விளக்கமாகக் கூறினான்.

பிரம்மாத்திரத்தால் உயிரிழந்த அனைவரும் உயிர் பெற்றெழுந்து தன்னை வாழ்த்தி நிற்க, அனுமன் அனைவருக்கும் உயிரைத் தந்தான்!

(தொடரும்)

தொடர் கவிதை :

# திருவேங்கடவர் பொன்னூசல்

செஞ்சொற்கவி. T. S. ராஜகோபாலன்-சென்னை.

## திவ்விய அவயவ சோபை

அரவிந்த நயனங்க ளகத்து ளோங்கும்
அன்போத வேங்கடவர்! ஆடி ரூசல்
அரவிந்த மென்கரங்கள் அன்பர்க் காக்கும்
அருளோத வேங்கடவர்! ஆடி ரூசல்
அரவிந்த முகிழதரம் அன்பர் தம்பால்
உறவாத வேங்கடவர்! ஆடி ரூசல்
அரவிந்தத் திருப்பாதம் அடியார்க் காவ
என்றிலங்குந் திருமார்வர்! ஆடி ரூசல்.

## வேங்கடவர்தம் தனிப்பெருமை

உலகுண்ட பெருவாயர்! ஆடி ரூசல்
உலகுமிழ்ந்த கருணையரே! ஆடி ரூசல்
உலகிரந்த உத்தமரே! ஆடி ரூசல்
உலகளந்த அச்சுதரே! ஆடி ரூசல்
உலகிடந்த ஒளியுருவே! ஆடி ரூசல்
உலகடர்ந்த நாரணனே! ஆடி ரூசல்
உலகடங்க வணங்குதிரு வேங்க டத்தின்
உச்சியுறை திருமார்வர்! ஆடி ரூசல்.

## எளியேனுக்கு அருள்புரிய வேண்டும்

எத்தையோடு மவர்முத்தை முந்தை
என்றிவர்தாம் நும்மடியே சரண மென்றே
உந்துதனி யன்பாலே உய்ந்து போனூர்
இதுவொன்றே உளங்கொள்வீர் எளியேனுய்ய
கந்தமொடு தேன்கொழிக்கும் பொழில்கள் போர்த்த
கல்லார வேங்கடத்தி னுச்சி யின்பால்
சிந்துதனி லுதித்ததனித் தேறல் செல்வி
சேர்ந்திலங்குந் திருமார்வர்! ஆடி ரூசல்.

## எளியேனுள்ளத்தைத் திருவேங்கடமாகக் கருத வேண்டும்

தெளிந்துயரும் ஞானத்தால் திகழுஞ் சான்றோர்
சேருஞ்சீர்க் கண்ணபுரச் செல்வன் தாளே
மிளிர்ந்துயரு மின்பத்திற்கு காகு மென்றே
மேவுமெளி யேனிராச கோபாலன்றன்
கிளர்ந்துயரும் நெஞ்சந்தான் கேச ரங்கன்
கீதம்பெய் திருமலைவாய் கோயி லென்றே
அளிந்ததனி யுள்ளத்தாள் பொன்னி யன்பால்
அணைந்துயருந் திருமார்வர்! ஆடி ரூசல்.

முற்றிற்று

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

[illegible] அலங்கரிக்கின்றது. அங்கு [illegible] கோவில் அமைந்து [illegible] நகர் மாநகரின் சிறப் [illegible] திருநகர் [illegible] சிறப்பு அம்சமாகும். கோயிலில் அலங்காரத் துடன் வைத்துள்ள இறைவனை உறைந் தாடுவது காண, அந்த அலங்கரிக்கப் பட்ட மற்ற அலங்காரங்கள் காண எல்லா மொழி பேசுபவரும் வந்து கண்டு களித்து செல்கின்றனர்.

மொழி, இனம், மத நிற வேறு பாடின்றி அனைவரும் இங்கு வந்து இறைவனை கண்டு களித்து செல்லும் காட்சி போற்றத்தக்கதாகும். இக் கோயில் வடகிழக்கின் ஒற்றுமை நிலை யம் எனினும தகும் சிறப்புடையது. இதன் பொறுப்பாண்மைக் குழுவைச் சார்ந்த திருமதி-ஸ்தாசஹரியா, திரு. K. K. சஹரியா, திரு M.K. சஹரியா, திரு. A. K. சஹாரியா, திரு. O. P. கேமானி ஆகியவர் ஆற்றும் பணி போற்றப்படும் தகைமையு டைத்து. சின்னாளில திப்ருகா மாநக ரின் நடுவில ஒரு பெரிய நாளங்காடி திரு பாலாஜியின் பெயரால் நிறுவப் பெறும் கூறுகள் காண்கிறோம். அதற் கான திட்டங்கள் மிகவும் விரைவாக நடைபெறுகின்றன. வெங்கடேஸ் வரர் மனமகிழ் மன்றம் ஒன்றினை அமைக்க உள்ளனர்.

இவ்வளவு சிறப்புடையஇக்கோயிலை இதனை வடித்த பின்புபார்க்கும் ஆவல் எவர் மனதிலும் எழாமல் இருக்காது. வாருங்கள். கண்டு களிபெறுங்கள். இறைவனின் ஆசி அடையுங்கள். இவ் வூருக்கு வான் வழியும் 'தரை வழியும்' புகைவண்டித் தொடர் வழியும் அடை யலாம் என்பது குறிப்பிடத் தக்கது. இப்படி பலவித அதிசயங்களுடன் தொடர்ந்து அழகாக நடந்துவரும் கோயிலை பல்லாயிரம் மக்கள் கண்டு களித்து ஸ்ரீவேங்கடவனின்அனுக்ரஹ த்தைப்பெற வாய்ப்பு செய்துகோயிலை சம்ப்ரோக்ஷணை செய்தவரும், தற் போது இக்கோயிலை மேற்பார்வை செய்து வருபவருமான ஸ்ரீ. உ. வே புலிக்குன்றம் சுந்தரராச்சாரியார் ஸ்வாமிக்கு, தயாநிதி அஷ்ட ஐஸ்வர் யங்களையும் தரணும் என்று வேண்டிக் கொள்கிறேன்.

★



திருமலை செல்லும் யாத்திரிகர் கவனத்துக்கு:

# வேங்கடேசப் பெருமாள் தரிசனம்

ஏழுமலையானை எளிதாகத் தரிசனம் செய்துவைப்பதாகச் சில வஞ்சகர்கள் கூறி, யாத்திரிகரை ஏமாற்றிப் பணம் பெறுவதாகத் திருமலை-திருப்பதி தேவஸ்தானத்துக்குத் தெரியவந்திருக்கிறது.

யாத்திரிகர் ஒழுங்காகவும் வரிசையிலும் சென்று பெருமாளைத் தரிசிக்க இயன்றளவு வழிசெய்திருக்கிறது தேவஸ்தானம். தினந்தோறும் சுமார் 10,000 பக்தர்கள் திருமலைக்கு வருகிறார்கள். இத்தனை மக்களும் தரிசிப்பதற்கு ஏற்ப, பெரும்பாலான நாட்களில் 14 மணி நேரம் கோவிலைத் திறந்துவைத்திருக்கிறார்கள். இதில் 11 மணி நேரம் தர்மதரிசனம். அதிகக் கூட்டம் உள்ள நாட்களில், தடுப்புக்கள் செய்த தனித் தனி அறைகளிலிருந்து பக்தர்கள் "கியூ"வில் வருகிறார்கள்; கூட்டம் குறைவான நாட்களில் மஹாத்வாரம் என்ற வெளிக் கோபுர வாசலிலிருந்து தகுந்த பாதுகாப்புடன் 'கியூ' தொடங்கி உள்ளே செல்கிறது.

'கியூ'வில் காத்திருக்க நேரம் இல்லாதவர்களும் உடல்நலமற்றவர்களும் தலைக்கு ரூ. 25/- கொடுத்துச் சிறப்புத் தரிசன டிக்கெட் வாங்கிக்கொண்டு கோயில் துவஜஸ்தம்பத்தின் அருகில் போய் 'கியூ'வில் சேர்ந்துகொள்ளலாம். இப்படி டிக்கெட் வாங்கியவர்கள் குறித்த நிமிஷத்தில் பெருமாளைத் தரிசித்துவிடலாம்.

வெளியார்மூலம் பெருமாளைத் தரிசிக்க முயற்சி செய்யாமல் இருக்குமாறு தேவஸ்தானம் யாத்திரிகரைக் கேட்டுக்கொள்கிறது. தேவஸ்தானம் ஏற்பாடு செய்துள்ள உன்னத முறைகளைவிட மிகச் சீக்கிரத்தில் யாராலும் தரிசனம் செய்துவைக்க முடியாது. ஏத்தர்களின் ஏமாற்று வார்த்தைகளை நம்பி ஏமாறாதீர்கள்.

கலியுக வரதனான வேங்கடேசப்பெருமாளைத் தரிசிக்க நேரமாவதால் கொஞ்சம் பொறுமை தேவை. அதுவே ஒரு தபஸ் போன்றது; நம் பக்திக்கு அது ஒரு சோதனை. இவை பெருமாளின் அருளைப்பெற வழி காட்டும்.

**நிர்வாக அதிகாரி, திருமலை-திருப்பதி·**
**தேவஸ்தானம் திருப்பதி**

அழகிய மணவாளப் பெருமாளின் ஆசார்ய ஹ்ருதயத்தில் ''வடமொழி வேதத்திற்கு உதாத்தாதி, பதம், கிரமம், ஜடை, வாக்கியம் முதலியன இருப்பது போல திவ்வியப் பிரபந்தத்திற்கு எழுத்து, அசை, சீர், பந்தம், அடி, தொகை, யாப்பு, பண்ணிசை, தாளம் முதலான செய்கோலம் உண்டு'' என்று கூறப்பட்டிருப்பதால் பாசுரங்கள் பண்ணுடனும், தாளத்துடனும் பாடப் பெற்றன என்பது உறுதியாகிறது.

நாலாயிரத்தில் இயற்பா தவிர ஏனைய மூன்றாயிரமும் இசையுடன் பாடப் பெற்றிருக்கின்றன. பெரியாழ்வார்.

''இன்னிசை மாலைகள் இப்பத்தும்'' என்றும் ''பண்பலபாடி பல்லாண்டு இசைப்ப'' என்றும் ''பண்பகர் வில்லிப்புத்தூர்க் கோன் பட்டர்பிரான் என்றும் பல்வகையாலும் கூறுவதும் கருதத்தக்கது. அன்றியும் நம்மாழ்வார்,

'' பண் ஆர் தமிழ் ''

என்றும்,

'' பால் ஏய் தமிழர் இசைகாரர்
பத்தர் பரவும் ஆயிரத்தின் ''

என்றும் கூறியுள்ளார்.

மதுரகவிகள்,

'' தேவுமற்றறியேன் குருகூர் நம்பி
பாவின் இன்னிசை பாடித் திரிவனே''

என்று கூறியதும்,

பட்டர்,

'' ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும்
குருகையர்கோன்
யாழின் இசை வேதத்தியல் ''

என்பதுவும் கருதற்பாலது,

# நாலாயிரத்தில் பண் அமைப்பு

சொன்னபத்தே 'என்றும் தாம்பண்ணுடன் பாடியதைத் தெளியவைக்கிறார். ஆண்டாள், 'கோதை இன்னிசையால் சொன்னமாலை' என்றும்,'குலசேகரர், 'குலசேகரன் இன்னிசையில் மேவி சொல்லிய இன்தமிழ்மாலை' என்றும், திருமங்கையாழ்வார்,

'' கலியனது ஒலிமாலை
அரிய இன்னிசை பாடும் அடியவர்க்கு
அருவினை அடையாவே ''

என்றும்,

'' பண்ணார் பாடல் பத்தும் பயில்வார்க்கு
இல்லை பாவங்களே ''

என்றும்,

'' பண்கள் அகம் பயின்ற சீர்ப்பாடல்
இவை
பத்தும் ''

என்றும்,

'' கலியன தமிழிவை விழுமிய
இசையினொடு
ஒலிசொலும் அடியவர் உறுதுயர்
இலரே ''

திருவரங்கம் கோயிலின் தினசரி நடைமுறைகளை விளக்கும் 'கோயில் ஒழுகு' என்ற நூலின்கண் 'என்னை வருக' என்று தொடங்கும் பெருமாள் திருமொழிக்கு இராமானுஜர், எம்பார் ஆகியோர் முன்னிலையில்கோயில் அரையர் என்னும்நாட்டியமாடுவோர் அபிநயம் பிடித்ததாகவும், 'என்சினம் தீர்வன் யானே' என்ற இடத்திற்கு இவ்விதம் அபிநயம் செய்யவேண்டும் என்று எம்பார் திருத்தியதாகவும் அமையும் செய்தி மேற்படி நூலில் காணப்படுகிறது. திருவரங்கம் போன்றே ஆழ்வார் திருநகரி, வில்லிபுத்தூரிலும் அரையர்கள் திருவாய்மொழியைத் தாளத்துடன் பாடி அபிநயம் பிடித்து வருவதும் குறிப்பிடத்தக்கது.

தாளம் வழங்கித் தமிழ் மறை இன்னிசை தந்த வள்ளலாகிய நாதமுனிகள் தம் மருமக்களாகிய மேலையகத்தாழ்வார், கீழையகத்தாழ்வார் என்னும் இசை வல்லுநர்களைக் கொண்டு திவ்யப் பிரபந்தத்திற்கு இசையமைக்கச் செய்ததாக அறிகிறோம்.

திவ்வியப் பிரபந்தத்தில் காணப்படும் பண்களையும் அதற்குரிய கர்நாடக சங்கீத ராகங்களையும் கீழே வரிசைப்படுத்தி உள்ளமை காண்க:

| பண்கள் | | ராகங்கள் |
|---|---|---|
| நட்டபாடை | — | நாட்டை |
| கொல்லி | — | நவரோஸ் |
| புறநீர்மை | — | பூபாளம் |
| கௌசிகம் | — | பைரவி |
| பழம்பஞ்சுரம் | — | சங்கராபரணம் |
| அந்தாளி | — | சாமா |
| செவ்வழிப்பாலை | — | தோடி |
| கல்வாணம் | — | கல்யாணி |
| இந்தளம் | — | மாயாமாளவ கௌளை |
| தக்கராகம், தக்கேசி | — | காம்போதி |
| சிகாமரம் | — | நாதநாமக்ரியா |
| பழந்தக்கராகம் | — | சுத்த சாவேரி |
| பஞ்சமம் | — | ஆஹிரி |
| நட்டராகம் | — | பந்துவராளி |
| குறிஞ்சி | — | ஹரிகாம்போதி |
| மேகராகக்குறிஞ்சி | — | நீலாம்பரி |
| வியாழக்குறிஞ்சி | — | சௌராஷ்டிரம் |

திவ்யப் பிரபந்தத்தில் ஏழொத்து நடையொத்து, இடையொத்து, ஒண்பதொத்து ஆகிய தாளங்கள் காணப் படுகின்றன. ஹரிகதா காலக்ஷேபம் செய்பவர்கள் ஏழடித்தாளம் என்ற ஒன்றைப் பயன்படுத்துகிறார்கள். ஏழொத்து அதைக் குறிக்கக்கூடும். இடையொத்து உசி தாளத்தையும் நடையொத்து நடைவேறுபாட்டையும் குறிக்கக்கூடும்.

திரு. பி. சுந்தரராமன், M. A., B. ED.
பழமார்னேரி.

தற்போது கோயில்களில் கோஷ்டியாகப் பிரபந்தம் ஓதிவரும் முறையேயன்றி பண்டைய இசை மரபை ஒட்டி பண் அமைத்து இத்தெய்வப் பாடல்களைத் தமிழ் நாடெங்கும் மீண்டும் ஒலிக்கச் செய்தால் ஆழ்வார்கள் உகப்பர். ஆழ்வார் உகந்தால் அரங்கனும் உகப்பன். இசையுலகம் இம்முயற்சியை விரும்பி ஏற்கும் என்பதில் ஐயமில்லை. ★

# முக்கவி கண்ட காப்பியம்

## "சுந்தர காண்டம்"

திரு. டி. ஜி. அனந்த சுப்ரமண்யம்,
(காபேயன்)
திருப்பதி.

ஹநுமான், அழகு மிக்க மாளிகைகளின் வாயில்களினுள்ளும், பல கணிகளினிடங்களினுள்ளும், மலர்களினுள்ளும் பூந்தண்டுகளின் உள் துளைகளிலும் காற்றுப் போலவும், புகைபோலவும் நுண்ணியதாகச் சென்று ஓடுவான். இடத்தின்வழிக்குத் தக்கப்படி மிகச்சிறிய வடிவங்கொள்வான். பெரிய வடிவமும் கொள்வான். அவ் அனுமான் வேண்டியபடி வடிவங் கொள்ளுகின்ற நிலையின் சிறப்பை எவர்தாம் சொல்லமாட்டுவர். மிகச் சிறு பொருளாகிய அனுவிலும் மிகப் பெரும் பொருளாகிய மேருவிலும் ஸ்ரீமந் நாராயணன்போலும் உட் செல்லவல்லவன்.

கம்பர் சுந்தர காண்டத்தில் ஹனுமான் விபீஷணனுடைய மாளிகையை அடைந்து விபீஷணனைப்பற்றி நன்கு அறிந்து கொண்டதாகக் கூறுகிறார். ஆனால் வால்மீகியோவெனில் விபீஷணனையும், அவன் மாளிகையைப்பற்றியும், பொதுவாகக் கூறியுள்ளார். கம்பர் கூறுவதன் காரணம், பிறகு விபீஷணனை இராமனுக்கு அறிமுகம் செய்துவைப்பதற்கு உதவியாக இருக்கும் என்பதாகும். விபீஷணனை ஹனுமான் எவ்வாறு பார்த்தார் என்பதை அழகாக வர்ணிக்கிறார்.

"பளிக்கு வேதிகைப் பவளத்தின்
கூடத்தில் பசுந்தேன்
துளிக்குங் கற்பகப் பந்தரிற் கரு
நிறத்தோரை
வெளித்து வைகுவ தரிதென
அவருரு மேவி
ஒளித்து வாழ்கின்ற தருமம்
அன்னான் தனை உற்றான்."

அந்த அழகான மாளிகையில் தரும ஸ்வரூபனான விபீஷணன் அவ்வரக்கக் கூட்டத்தின் நடுவில் தான் நேர்மையாக வசிக்க முடியாது என்ற எண்ணத்துடன் அவர்களைப்போலவே கருநிற வடிவங்கொண்டு அவர்களைப்போலவே வசித்தான் என்று கூறுகிறார். விபீஷணன் தர்ம சிந்தனையுடையவன். தர்மத்தை வெண்ணிறமாக வர்ணிப்பது கவிஞர்களின் மரபு. இவ்விதமாகப் பல அரக்கர்களின் வீட்டைக் கடந்து இந்திரஜித்தின் மாளிகையை அடைந்தார். அங்கே இந்திரஜித்தைப் பார்த்து ஒரு முகமுடைய முருகனோ என்று ஐயப்படுகிறார் ஹநுமான் என்று கூறுகிறார் கம்பர்.

"முக்கண் நோக்கினன் முதல் மகன்
அறுவகை முகனும்
திக்கு நோக்கிய கரங்களும் சில
கரந்து அனையான்
ஒக்க நோக்கியர் குழாத்திடை
உறங்கு கின்றானைப்
புக்கு நோக்கினன் புகை புகா
வாயிலும் புகுவான்"

சிவபிரானது இளைய குமாரனை முருகக் கடவுள் அழகிலும், பலபராக்கிரமங்களிலும் சிறத்தலால் அவ்வியல் புகளோடு கூறப்படுபவன் இராவணன் மகனும் மகாவீரனுமான இந்திரஜித்து. ஒரு முகத்தையும், இருகைகளையுமே யுடையவனாயிருத்தலால் அவனை, ஆறுமுகங்களையும்பன்னிரண்டு கைகளையுமுடையவனான சுப்ரமண்யன் ஒரு முகத்துடனும் இரண்டு கைகளுடனும் இருந்தாற்போல் இருந்தான் என்றுகூறுகிறார். இப்பாட்டில் முக்கண்ணனின் முதன் மகன் என்றால் முருகனைத்தான் குறிப்பிடுகிறார். ஆனால் பாடலில் உள்ள வாக்யத்தைப் பார்த்தால் விநாயகன் என்று தோன்றும். ஆனால் தெய்வஸேனாதிபதியாய் தீயோரொழித்து நல்லோரைக் காத்துப் புகழ் பெருமைகள் படைத்து அழகிலும், ஆற்றலிலுஞ் சிறத்தலால் முருகக் கடவுள் முதன மகன் எனப்பட்டான். பிறகு அகழியைப் பார்த்து ஆச்சர்யப்பட்டு, அகழியையும், அதைச் சேர்ந்த மதில் சுவர்களையும் கடந்து இலங்கையின் உட்பகுதியான நகரத்தை அழகாக வர்ணித்துள்ளார். மேலும் ஹநுமான் தேடுங்கால் மிகநுண்ணியஇடங்களிலும் நுழைந்து சென்று பார்த்தார் என்பதை மிக அழகாகக் கூறுகிறார்.

"தழைந்த மொய் ஒளி பெய் மணி
தாழ்தொறும்
இழைந்த நூலின் உம் இன் இளங்
காலினும்
நுழைந்து நொய்தினில் மெய் உற
நோக்கினான்
விழைந்த வெம் வினை வேர் அற
வீசினான்"

மிகவும் நுண்ணிய துவாரமுள்ள கதவுகளின் தாழ்ப்பாள் துவாரத்தில் நுழைந்து சென்று சீதையைத் தேடினார். மேலும் நுண்ணிய நூலைக் காட்டிலும் இனிமையான இளங் காற்றைக்காட்டிலும் நுட்பமாகத் தன் வடிவம் அமைய நுழைந்து சென்று பார்த்தனன். மேலும் இராவணன் தான் அநுபவிப்பதற்காக யக்ஷ ஸ்திரீகளைத் தன் அரண்மனையில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருமாளிகைக் கட்டிக் கொடுத்ததாகவும், அவைகளையும் ஹநுமான் பார்த்ததாகவும் வர்ணிக்கிறார். அவ்விதம் வர்ணித்துக் கொண்டுவரும் பொழுது, இராவணனுடைய புகழைச் சில யக்ஷிணிகள் பாடுகிறார்கள். அப்பொழுது, சிவ பிரானைப்பற்றிப் பாடிய இராவணன் என்று இராவணனுடைய புகழைப் பாடுகிறார்கள் என்று கம்பர் குறிப்பிடுகிறார்.

"கூடி நான்கு உயர் வேலையும் கோக்க
நின்று
ஆடினான் புகழ் அம்கை நரம்பினால்
நாடி நால் பெரும் பண்ணும் நயப்
புறப்
பாடினான் பெயர் பாடுகின்றார்சிலர்"

இராவணன் தன் கை நரம்புகளை தந்திகளாக அமைத்து வீணையில் பாடி பரமசிவனை மகிழ்வித்தவன் என்று பாடினார்கள். ஹநுமான் பல வீதிகளைக் கடந்து அரக்கியர் வீதிகளில் சென்று ஒவ்வொரு மாளிகையாகப் பார்த்து வரும்பொழுது மந்தோதரியின் மாளிகையைப் பார்த்தார். அங்கே படுக்கையில் மந்தோதரி படுத்திருந்தாள். அவளைப் பார்த்த ஹநுமான்,

कपिर्मन्दोदरीं तत्र रात्रानां चारुरूपिणीम् ।
स तां दृष्ट्वा महाबाहुः भूषितां मारुतत्मजः ।।
तर्कमामास सीतेति रूपभौवनसम्पदा ।।

என்று கூறுவதாக வால்மீகி கூறுகிறார்.

(தொடரும்)

# செய்திச் சுருக்கம்

திருமலை கோயிலில் 'கானுகா' அறைக்கெதிரில் தான் கண்டெடுத்த ரூ. 101-ஐ மேலாண்மையிடம் ஒப்படைத்த, வாகனம் சுமக்கும் ஊழியரான திரு. என். பாபிரெட்டி அவர்களின் நேர்மையைப் பாராட்டி அவருக்கு ரூ. 25/ பரிசாக வழங்க மேலாண்மை முடிவு செய்துள்ளது.

ஆந்திர மாநிலத்திலேயே அதிக மாணவர்களைக் கொண்ட ஒரே பள்ளியான திருமலையிலுள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ வேங்கடேஸ்வரா துவக்கப்பள்ளி, மாநிலத்திலுள்ள 2000 துவக்கப்பள்ளிகளில் சிறந்த பள்ளியாக தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளதைத் தொடர்ந்து, அப்பள்ளியின் தலைமையாசிரியரை பாராட்டும்விதத்தில், அவருக்கு 3 கிராம் எடையுள்ள தங்கப்பதக்கம் ஒன்றினை வழங்க மேலாண்மை முடிவு செய்துள்ளது.

திருப்பதியில் தி. தி. தேவஸ்தானத்தின் கல்லூரிகளில் ஒன்றான ஸ்ரீ வேங்கடேஸ்வரா இளநிலைக் கல்லூரியைச் சார்ந்த மாணவன் செல்வன். எல். வெங்கடகிருஷ்ணு சென்ற ஆண்டு நடைபெற்ற புதுமுக வகுப்புத் தேர்வில் ஆந்திர மாநிலத்திலேயே ஆங்கிலப் பாடத்தில் முதலாவதாகத் தேறியுள்ளதைப் பாராட்டும்வகையில் அம்மாணவருக்கு 3 கிராம் எடையுள்ள தங்கப்பதக்கம் ஒன்றினை வழங்க மேலாண்மை முடிவு செய்துள்ளது.

திருமலை கோயிலில் 'க்யூ' முறையை ஒழுங்குப்படுத்தும்போது, தான் கண்டெடுத்த ரூ. 3800/- பெறுமான பொருட்களைக் கொண்ட (தங்க நகை ஒன்றும், சிறிது பணமும்) பை ஒன்றினை மேலாண்மையிடம் ஒப்படைத்த வாகனம் சுமக்கும் ஊழியரான திரு. பி. ஸ்ரீநிவாசுலு அவர்களின் நேர்மையைப் பாராட்டும் வகையில் அவருக்கு ரூ 100/- பரிசாக வழங்கப்பட உள்ளது.

இந்திய ஜனாதிபதி திரு. என். சஞ்சீவி ரெட்டி அவர்கள் 6-7-78 அன்று மாலை திருமலைக்கு வருகை புரிந்தார். அடுத்த நாள் காலை 7-7-78 அன்று காலை 4 மணி அளவில் இறைவனைத் தரிசித்தார்.

6–7–78 அன்று காலை திருமலையில் ஆந்திர மாநில இந்து அறநிலைய அமைச்சர் திரு. வி. வெங்கடநாராயணு அவர்கள் "Pilgrimage to Tirumala–Tirupati" எனும் தி தி. தேவஸ்தான ஆங்கில நூல் ஒன்றினை வெளியிட்டார். இதனை ஒட்டி ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்கு வருகைபுரிந்தோரை தி தி.தேவஸ்தானத்தின் செயலாட்சித் தலைவராக தாற்காலிகமாக பொறுப்பேற்றுள்ள திரு. பி. ஆனந்தராஸ் முதலியார் அவர்கள் வரவேற்றார்.

பின்னர், மேற்கூறிய நூலினை வெளியிட்டு உரையாற்றிய அமைச்சர் அவர்கள், இந்து சமயக் கோட்பாடுகளின் பெருமைகளை உலகமெங்கும் பரப்பும் வகையில் தி. தி. தேவஸ்தானம் பெரும் அளவில் முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும் என்றும், திருமலைக்கு வரும் பல்வேறு மாநிலங்களைச் சார்ந்த யாத்திரிகர்கள் பயன் பெறும் வகையில் தி. தி தேவஸ்தான கோவில்களைப் பற்றியத் தகவல்களை பல்வேறு மொழிகளில் வெளியிடப்பட வேண்டியதின் அவசியத்தையும குறிப்பிட்டார் தொடர்ந்து பேசுகையில் அமெரிக்காவில் நியூயார்க்கிலும், பிட்ஸ்பர்க்கிலும் கட்டப்பட்டுள்ள இந்தியக் கோயில்களின் புகழ் பெரிதும் பரவி வருகின்றது என்றும், அமெரிக்க அரசாங்கத்தின் அழைப்பினை ஏற்றுக்கொள்ளும வகையில் தானும், ஆந்திர மாநில முதலமைச்சர் அவர்களும் விரைவில் அமெரிக்காவிற்குச் செல்ல இருப்பதையும் கூறினார்.

விழாவில் பங்கேற்றுப் பேசிய தி.தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் டாக்டர். திரு. சி. அண்ணாராவ் அவர்கள் திருமலைக் கோயில் மற்றும் தேவஸ்தானத்தின் பல் வேறு சமய கலாசார நிகழ்ச்சிகளைப் பற்றி யாத்திரிகர்கள் தெரிந்து கொள்ளும் வகையில் இந்நூல் வெளியிடப்பட்டுள்ளது என்றும், திருமலையில் யாத்ரிகர்களுக்கு மேலும் பல வசதிகளை செய்து தரும் வகையில் தி.தி. தேவஸ்தானம பல்வேறு முயற்சிகளை மேற்கொண்டுள்ளது என்றும் கூறினார்.

இவ்விழாவின் போது முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் திரு. ஜி. வெங்கண்ணு அவர்களும் உரையாற்றினார்.

---

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

கொண்டபடி அவர்கள் கட்டிய அறைகள் ஒதுக்க முடியா சூழ்நிலை ஏற்படின், அவர்களுக்கு வேறு அறைகள் ஒதுக்கப்படும்.

கல்கத்தாவில் ஜகசா எனும் ஊரிலுள்ள 'சாந்த்ர காச்சி மிக்ஸ்டு' உயர் நிலைப் பள்ளிக் கட்டடத்திற்காக, தேவஸ்தானத்தின் பங்காக ரூ 1 இலட்சம் வழங்குவதென்று குழு முடிவு செய்துள்ளது.

தி. தி. தேவஸ்தானத்தின் 'முதியோர் இல்லம்' ஒன்றினை நடத்த, திருப்பதிக்கு அருகிலுள்ள கல்யாணி குடிநீர்த்தேக்கத்தினருகே அமைந்துள்ள அரசு கட்டடங்களையும், அதனை அடுத்துள்ள 300 ஏக்கர் பரப்புள்ள காட்டுப் பிரதேசத்தையும் விலைக்கு வாங்க குழு முடிவு செய்துள்ளது.

புகழ் பெற்ற இந்திப் பாடகியான ஆஷா போன்ஸ்லே அவர்களை தி. தி. தேவஸ்தானத்தின் ஆஸ்தான வித்வானக நியமிக்க குழு தீர்மானித்துள்ளது.

1978-79 ஆம் கல்வி ஆண்டுக்கான வளர்ச்சி நிதியாக திருப்பதி ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக்கழகத்திற்கு ரூ 10 இலட்சம் வழங்க குழு தீர்மானித்துள்ளது.

தமிழ்நாடு வட ஆற்காடு மாவட்டத்தில் மாவட்டத் தலைநகரான வேலூரிலுள்ள தி. தி. தேவஸ்தானத்தின் ஸ்ரீ வேங்கடேஸ்வரா உயர் நிலைப்பள்ளியில், தமிழ்நாடு அரசின் விருப்பத்தை ஏற்கும் வகையில், 10 + 2 + 3 எனும் கல்வித் திட்டத்தை 1978-ம் ஆண்டு முதல் அமுலாக்குவது என்று குழு தீர்மானித்துள்ளது. ★



பவித்ரோற்சவம் என்றால் புனித விழா என்றுபொருள்படும். கோயிலின் ஆன்மீகச் சூழ்நிலையை தொடர்ந்து நிலவச் செய்யும் பொருட்டு ஒவ்வொரு ஆண்டும் இவ்விழா கோயில் அரங்கி னுள் மேற்கொள்ளப்படும். கி. பி. 1464-ஆம் ஆண்டைச் சார்ந்த கல் வெட்டுக் குறிப்பு ஒன்றிலிருந்து இவ் விழாவைப் பற்றிய முதற் செய்தி

# பவித்ரோற்சவம்

காணப்படுகின்றது. இக்கல்வெட்டுக் குறிப்பிலிருந்து மேலும் நாம் அறிவ தாவது: இவ்விழா ஆவணிமாதத்தில் 5 நாட்கள் வேத கோஷங்களுடனும் மந்திர ஒலிகளுடனும் திருமலை கோயி லில் நடைபெற்றுவந்தது. இக்கோயில் வருவாய்க்கென ஏலம்பாக்கம் என் னும் கிராமம் மானியமாக வழங்கப் பட்டது என்பதும், மேலும் ஏலமண்டி யம், விக்ரமாதித்திய மங்கலம் எனும் ஊர்களிலுள்ள கோயில் நிலங்களுக்கு நீர் பாசன வசதிக்கு மேற்கூறிய கிரா மத்தில் இரண்டு ஊற்றுக் கால்வாய் கள் தோண்டப்பட்டன என்றும், இவற்றினால் பெறும் வருவாய் இக் கோயிலில் நடத்தப்படும் 'பவித்ரோற் சவம்' விழாவிற்கு செலவிடப்பட்டது என்றும் கூறுகின்றது.

ஆவணிமாதம் சுக்ல தசமி நாள் இரவன்று நடத்தப்படும் அங்குராப் பண நாள் தவிர்த்து இவ்விழா 5 நாட் கள் கொண்டாடப்பட்டது. 5-வது நாளான ஆவணி பௌர்ணமியை (சிராவண பௌர்ணமி) முதல் மூன்று குலத்தார் புனித நாளாகக் கொண் டாடினர் ஏகாதசி நாளன்று உற்சவ மூர்த்தி திருமாமணி மண்டபத்தை அலங்கரிப்பார். துவாதசி நாளன்று இறைவன் பவித்ரத்தால் (திரித்த புனித நூலால்) அலங்கரிக்கப்பட்டு தனது நாச்சிமார்களுடன் திருவீதி வலம் வருவார். 'விஷ்ணு பவித்ரா ரோணம்' என்று கூறப்படும் ஆவணி மாதம் சுக்லதுவாதசி நாளன்று இறை வன் யஞ்ஞ பவித்ரத்தால் அலங்கரிக் கப்படுவார். இவ்ஐந்து நாட்களின் போது ஒவ்வொரு நாளும் கோயில் அரங்கினுள் வேதங்கள் ஒருபுறம் ஓதப் பட, மறுபுறம் புராணச் சொற்பொழி வுகள் நடைபெற, வளர்க்கப்பட்ட ஹோமத் தீ எங்கும் காற்றினில் கலந்து சூழ்ந்திருக்க கோயிலின் சுற் றுப்புறச்சூழ்நிலை பக்தியின் எல்லை யைத் தொடும்.

இவ்வாறு கொண்டாடப்பட்ட இவ் விழா கி. பி. 1562 வரை நடைபெற்று வந்ததாகத் தெரிகின்றது. பின்னர் எக்காரணத்தால், எப்பொழுது இவ் விழா தொடர்ந்து கொண்டாடப்பட வில்லை என்பது திட்டவட்டமாக அறிந்து கொள்ளமுடியவில்லை. ஆனால் பல ஆண்டுகள் பிறகு அண்மையில்இவ் விழா மீண்டும் கொண்டாடப்பட்டு வருகின்றது. அவ்வகையில்இவ்வாண்டு 'பவித்ரோற்சவம்' 14-8-78 முதல் 16-8-78 வரை மூன்று நாட்கள் திரு மலையில் வெகு விமரிசையாகக் கொண் டாடப்படும். இதுபோது யாத்திரி கர்கள் திருமலைக்கு வருகை புரிந்து ஏழுமலையானின் தரிசனம் பெறுவது என்பது சிறந்ததாகக் கருதப்படும்.

# ராசி பலன்

(1-8-78 முதல் 31-8-78 வரை)

டாக்டர் டி. அர்க்கசோமயாஜி, M.A., Ph.D.
திருப்பதி.



## மேஷம்:

*[அசுவனி, பரணி, கார்த்திகை முதல பாதம் முடிய]*

ராகுவினுல் பணவரவு; செவ்வாயினுல் வெற்றி, மதிப்புயர்தல்; சனியினுல் கருத்து வேறுபாடுகள், பொருள் நஷ்டம், பிள்ளைகள் அல்லது பெண்களிடமிருந்து பிரிவு அல்லது அவர்கள் முன்னிட்டு கவலைக்குள்ளாதல்; குருவினுல் உறவினர்கள்மூலம் தொல்லைகளுக்குள்ளாதல்; சூரியனுல் உடல் நலம் கெடல் அல்லது எதிரிகள் ஏற்படல்; புதனுல் பணவரவு, குடும்பத்தில் நன்மைகள் ஏற்படல்; சுக்ரனுல் உடல்நலம் பாதிப்பு அல்லது இகழ்ச்சிக்குள்ளாதல்.



## ரிஷபம்:

*[கார்த்திகை 2-ம் பாதம் முதல், ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம் பாதம் முடிய]*

ராகுவினுல் கவலைகள்; செவ்வாயினுல் உடல்நலம் கெடல், அல்லது எதிரிகள் ஏற்படல், அல்லது தன்னுடைய மக்கள் முன்னிட்டு கவலைக்குள்ளாதல்; சனியினுல் பண நஷ்டம் அல்லது உற்ருர் உறவினருடன் பிரிவு; குருவினுல் மாதத்தின் முதல் 5 நாட்கள் வரை நன்மைகள் ஏற்படல், மீதி நாட்களில் ஏமாற்றங்களுக்குள்ளாதல் அல்லது அலுவலகக் கவலைகளுக்குள்ளாதல்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது பணவரவு, மதிப்புயர்தல் ஆனுல் இறுதி 15 நாட்களின்போது உடல்நலம் கெடல்; சுக்ரனுல் புதிய உறவுகள் ஏற்படல்; புதனுல் புதிய நண்பர்கள் ஆனுல் தீய நடவடிக்கைகளுக்குள்ளாதல்.



## மிதுனம்:

*[மிருக சீரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய]*

ராகுவினுல் கருத்து வேறுபாடுகள்; சனியினுல் பணவரவு, வாகன வாய்ப்பு, புதிய வீட்டு மரச்சாமான்கள் வாங்குதல், புதிய வீடு வாங்குதற்குரிய வாய்ப்பு, உடல் நலமேன்மை; செவ்வாயினுல் உடல்நலம் கெடல், தீய நட்புறவுகளால் கெடுதிகளுக்குள்ளாதல்; குருவினுல் மாதத்தின் 5-ம் தேதியிலிருந்து பணவரவு, வெற்றி; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது பண நஷ்டம் அல்லது கண் சம்பந்தப்பட்ட நோயினுல் அவதிப்படல் அல்லது மற்றவர்களால் ஏமாற்றப்படல், மாதத்தின் இறுதி 15 நாட்களின்போது பணவரவு, வெற்றி, மதிப்புயர்தல்; சுக்ரனுல் நண்பர்கள், முயற்சிகள் வெற்றி பெறுவதற்குரிய சூழ்நிலை ஏற்படல்; புதனுல் இகழ்ச்சிக்குளளாதல்.



## கடகம்:

*[புனர் பூசம் 4-ம் பாதம் முதல் பூசம் ஆயில்யம் முடிய]*

ராகுவினுல் பணவரவு ஏற்பட்டாலும், சனியினுல் அவ்வரவு பயனற்றுப் போதல்; செவ்வாயினுல் தன் பிள்ளைகள்மூலம் பணவரவு அல்லது பிறரை ஏமாற்றி அதனுல் பொருள் கிடைக்கப் பெறல்; குருவினுல் கருத்து வேறுபாடுகள், மாதத்தின் 5-ம் தேதி முதற் கொண்டு பண நஷ்டம்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது பிரயாணமும் அதனுல் உடல்நலம் கெடலும் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோய்க்குள்ளாதல், மாதத்தின் இறுதி 15 நாட்களின் போது பண நஷ்டம் அல்லது கண் சம்பந்தப்பட்ட நோய்க்குள்ளாதல்; சுக்ரனுல் பணவரவு, மதிப்புயர்தல் புதிய ஆடை ஆபரணங்கள் கிடைக்கப் பெறல், எதிரிகளை வெற்றி கொளல்; புதனுல் கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதல், தவறான அறிவுரைகளைக் கேட்டதன் பயனுக கெடுதிகள் ஏற்படல்.



## சிம்மம்:

*[மகம, பூரம, உத்திரம் முதல் பாதம் முடிய]*

ராகுவினுல் பணநஷ்டம்; சனியினுல் உறவினருடன் பிரிவு அல்லது பிரயாணம் மற்றும் பொருள் நஷ்டம் அல்லது எதிரிகளால் கெடுதிகள் ஏற்படல்; செவ்வாயினுல் அலுவலகக் கவலைகள் அல்லது கருத்து வேறுபாடுகள் அல்லது வஞ்சகத்தால் பொருள் பறிபோதலால் நஷ்டத்திற்குள்ளாதல்; குருவினுல் பிரயாணமும், உடல் நலம் கெடலும்; சூரியனுல் பணநஷ்டம் அல்லது பிரயாணம் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினுல் அவதிப்படல், சுக்ரனுல் பணவரவு, தானிய வகைகள் கிடைக்கப்பெறல், புதிய ஆடை ஆபரணங்கள் வாங்கப்பெறல் அல்லது மதிப்புயர்தல்; புதனுல் குடும்பத்தில் உட்பூசல்கள் அல்லது உடல் நலம் கெடல் அல்லது மதிப்புக்கெடல்.



## கன்னி:

*[உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய].*

ராகுவினுல் தீமைகள் ஏற்படல்; சனியினுலும் செவ்வாயினுலும் மன

யமைதி இழத்தல்; குருவினுல் பண வரவும், மதிப்புயர்தலும்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது வெற்றி, உடல்நலமேன்மை பணவரவு, மதிப்புயர்தல், மாதத்தின் இறுதி 15 நாட்களின் போது கெடுதிகள் ஏற்படல்; சுக்ரனுல் குடும்பத்தில் மகிழ்ச்சி; புதனுல் பணவரவு, புதிய நண்பர்கள் அல்லது புதிய வாகன வாய்ப்பு.



## துலா :

[சித்திரை 3-ம் பாதம் முதல், ஸ்வாதி, விசாகம் 3-ம் பாதம் முடிய]

ராகுவினுல் பணநஷ்டம்; சனியினுல் பணவரவு குடும்பத்தில் மகிழ்ச்சி; செவ்வாயினுல் அவசியமற்ற செலவுகள், மனைவிக்கு மனயமைதியின்மை அல்லது கண் சம்பந்தப்பட்ட நோய்க்குள்ளாதல் அல்லது வேறு எந்தவகையாயினும் உடல்நலம் பாதிக்கப்படல்; குருவினுல் பொருள் நஷ்டம், இகழ்ச்சிக்குள்ளாதல்; சூரியனுல் பணவரவு, வெற்றி, உடல்நல மேன்மை, மதிப்புயர்தல்; சுக்ரனுல் கெடுதிகள்ஏற்படல், புதனுல் வெற்றி, பணவரவு, மகிழ்ச்சி.



## விருச்சிகம் :

[விசாகம் 4-ம் பாதம் முதல், அனுஷம் கேட்டை முடிய]

ராகுவினுல் மகிழ்ச்சி; சனியினுல் பணநஷ்டம், தன் மதிப்புக்கெடல்; செவ்வாயினுல் வெற்றி, பணவரவு, மகிழ்ச்சி; குருவினுல் பணவரவு வெற்றி, தானியவகைகள் கிடைக்கப்பெறல், தன் பிள்ளைகள் அல்லது பெண்களுக்கு நன்மைகள் ஏற்படல்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது ஏமாற்றங்களுக்குள்ளாதல் அல்லது பணநஷ்டம் அல்லது உடல்நலம்கெடல், ஆனுல் இறுதி 15 நாட்களின் போது பணவரவும், வெற்றியும்; சுக்ரனுல் பணவரவு, நண்பர்கள் அல்லது புதிய ஆடை ஆபரணங்கள் கிடைக்கப்பெறல்; புதனுல் எடுக்கப்படும் முயற்சிகள் காலாதாமதப்படல்.



## தனுசு :

[மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய].

ராகுவினுல் கருத்து வேறுபாடுகள்; சனியினுலும் கருத்து வேறுபாடுகள் அல்லது உடல்நலம் கெடல் அல்லது தீய நடவடிக்கைகளுக்குள்ளாதல்; செவ்வாயினுல் அதிகமான பொருள் வரவு; குருவினுல் உடல்நலம் கெடல்; சூரியனுல் உடல் நலம் கெடல் அல்லது ஏமாற்றங்களுக்குள்ளாதல் அல்லது பணநஷ்டம்; சுக்ரனுல் கருத்து வேறுபாடுகள், இகழ்ச்சிக்குள்ளாதல்; புதனுல் வெற்றி, புதிய ஆடை ஆபரணங்கள் கிடைக்கப்பெறல், மக்கட்பேறு அல்லது அவர்களுக்கு நன்மை ஏற்படல்.



## மகரம் :

[உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் முடிய].

ராகுவினுல் தீய நடவடிக்கைகளுக்குள்ளாதல்; சனியினுல் உற்றார் உறவினருடன் பிரிவு; செவ்வாயினுல் பணநஷ்டம் அல்லது மதிப்புக்கெடல்; குருவினுல் மாதத்தின் 5-ஆம் நாளிலிருந்து நன்மைகள் ஏற்படல், மகிழ்ச்சி, சூரியனுல் பிரயாணம், உடல்நலம் கெடல்; சுக்ரனுல் பணவரவு, புதிய ஆடை ஆபரணங்கள் கிடைக்கப்பெறல், மகிழ்ச்சி; புதனுல் கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதல்.



## கும்பம் :

[அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதையம், பூரட்டாதி 3-ம் பாதம் முடிய]

ராகுவினுல் மனயமைதிபறிபோதல்; சனியினுல் பிரயாணம்; செவ்வாயினுல் பணநஷ்டம், மதிப்புக்கெடல், உடல்நலம் கெடல்; குருவினுல் மனயமைதி இழத்தல்; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின் போது உடல் நலமேன்மை, வெற்றி, இறுதி 15 நாட்களின்போது உடல்நலம்கெடல்; சுக்ரனுல் புதிய ஆடை ஆபரணங்கள் கிடைக்கப்பெறல், மகிழ்ச்சி; புதனுல் வெற்றி மற்றும் பதவி உயர்வு.



## மீனம் :

[பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய].

ராகுவினுல் கருத்து வேறுபாடுகள்; சனியினுல் உடல்நல மேன்மை, வெற்றி; செவ்வாயினுல் மனைவியுடன் கருத்து வேறுபாடு கொள்ளுதல், அல்லது கண் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோய்களினுல் அவதியுறல்; குருவினுல் மாதத்தின் 5-ஆம் நாளிலிருந்து தன் பிள்ளைகள், பெண்களுக்கு நன்மைகள் ஏற்படல், பணவரவு, புதிய ஆடை ஆபரணங்கள் கிடைக்கப்பெறல், மகிழ்ச்சி; சூரியனுல் மாதத்தின் முதல் 15 நாட்களின்போது உடல்நலம் கெடல், எதிரிகளால் கவலைக்குள்ளாதல். ஆனுல் இறுதி 15 நாட்களின்போது உடல்நல மேன்மை, வெற்றி; சுக்ரனுல் பெண்களின்மூலம்தொல்லைகளுக்குள்ளாதல்; புதனுல் மனைவி அல்லது பிள்ளைகளுடன் கருத்து வேறுபாடுகள் கொள்ளுதல்.

★

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T.T.D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI. 517501

Regd. No. H/TRP/12 தனிப்பிரதி 50 கா

திருமலை திருப்பதி தேவஸ்தான

## ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

# ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

ஹாரத்தி (ஒவ்வொன்றுக்கும்) கட்டணம் ரூ. 1

### ஸேவைகள் (ஸேவிப்பது மாத்திரம்)

| | | |
|---|---|---|
| சிறப்பு தரிசனம் | ரூ. | 25 |
| தோமாலை ஸேவைக்குப்பிறகு தரிசனம் | ,, | 4 |
| அர்ச்சனை (ஸஹஸ்ரநாமம் அஷ்டோத்தரம்) பிறகு தரிசனம் | ,, | 4 |
| ஏகாந்த ஸேவைக்குப் பிறகு தரிசனம் | ,, | 4 |
| பூலங்கி ஸேவைக்குப் பிறகு தரிசனம் | ,, | 4 |
| திருமஞ்சனம் ஸேவைக்குப்பிறகு தரிசனம் | ,, | 4 |

### கைங்கர்யங்கள் (செய்து வைப்பது)

| | | |
|---|---|---|
| ஆமந்த்ரணோத்ஸவம் | ,, | 200 |
| பூலங்கி ஸேவை | ,, | 60 |
| திருமஞ்சனம் | ,, | 450 |
| கம்பூராக் கிண்ணி | ,, | 250 |
| புனுகுசட்டம் கிண்ணி | ,, | 100 |
| கஸ்தூரிக் கிண்ணி | ,, | 100 |
| ஜாபாராக் கிண்ணி | ,, | 100 |
| ஸஹஸ்ர கலசாபிஷேகம் | ,, | 2500 |
| திருப்பாவாடை | ,, | 5000 |
| கோயிலாழ்வார் திருமஞ்சனம் | ,, | 1745 |

### உத்ஸவக் கட்டணங்கள்

| | | |
|---|---|---|
| வஸந்தோத்ஸவம் | ,, | 2500 |
| பிரம்மோத்ஸவம் | ,, | 750 |
| கல்யாண உத்ஸவம் | ,, | 1000 |
| ஊஞ்சல் சேவை | ,, | 1000 |
| தெப்போற்சவம் | ,, | 1500 |

### வாஹனங்கள்

| | | |
|---|---|---|
| ஸர்வபூபாலம் வஜ்ரகவச சேவை 72+1 (ஹாரத்தி) | ,, | 73 |
| ஸர்வபூபாலம், கல்பவ்ருக்ஷம், பெரிய சேஷவாஹனம் ஸூர்யப்ரபை, புஷ்பரதம், முத்துப்பந்தல், தங்ககருடவாஹனம் தனித்தனி 62+1 (ஹாரத்தி) | ரூ. | 63 |
| வெள்ளி கருடவாஹனம், ஹனுமந்த வாஹனம், சின்ன சேஷவாஹனம், குதிரை வாஹனம், ஸிம்ஹவாஹனம், ஹம்ஸ வாஹனம், சந்திரபிரபை, யானை வாஹனம் தனித்தனி 32+1 (ஹாரத்தி) | ,, | 33 |

### பிரஸாதங்கள் (கால் சோலா தளிகை ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| தத்யோதனம் | ,, | 40 |
| புளிஹோரை | ,, | 50 |
| பொங்கல் | ,, | 55 |
| சர்க்கரைப் பொங்கல் | ,, | 65 |
| ஸாகர்பாத் | ,, | 80 |
| கேஸரிபாத் | ,, | 90 |
| பாயஸம் | ,, | 85 |
| சீரா | ,, | 155 |

### படிகள் (படி ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| லட்டு | ,, | 450 |
| வடை | ,, | 250 |
| போளி | ,, | 225 |
| தோசை | ,, | 100 |
| ஸுகியம் | ,, | 200 |
| ஜிலேபி | ,, | 450 |
| அப்பம் | ,, | 230 |
| தேன்துளை | ,, | 200 |

### நித்திய ஸேவைகள்

| | | |
|---|---|---|
| நித்திய கற்பூர ஹாரத்தி | ,, | 21 |
| நித்திய நவநீத ஹாரத்தி | ,, | 42 |
| நித்திய அர்ச்சனை | ,, | 42 |

குறிப்பு: ஸஹஸ்ர கலசாபிஷேகம் ஒவ்வொரு புதன்கிழமையும், திருப்பாவாடை ஒவ்வொரு வியாழக்கிழமையும் நடைபெறும்.
மற்றைய விவரங்களுக்கு கீழே கொடுக்கப்பட்டுள்ள முகவரியுடன் தொடர்புகொள்ளுக.

செயலாட்சித் தலைவர்,
திருமலை திருப்பதி தேவஸ்தானம்,
திருப்பதி 517501.